# குமரேச சதகம்

(அரும்பதவுரையுடன்)

---

வேலூர் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

பு. ந. ஸ்ரீநிவாஸாசாரியரால்

வேலூர்

சுந்தர விநாயகர் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

---



1912

விலை அணா இரண்டரை

# Prahladalvan Charithai

## A Few Opinions

---

"Prahlada Charitram is well-written. I am sure it will become popular among High School and College students"-T. CHELVAKESAVARAYA MUDALIAR ESQR., M A, PACHAIAPPA'S COLLEGE, MADRAS.

---

"வேலூர்க்காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத் பு. க. ஸ்ரீநிவாஸாசாரியர், தமிழில் வசன நடையாக இயற்றிய பிரகலாதாழ்வான் சரிதையென்னும் புஸ்தகம், தெளிந்த இனிய நடையில் எழுதப்பெற்றிருத்தலின், மிக்க இன்பத்தை விளைவிக்கின்றது. இதனுள் அங்கங்கே எடுத்துக் காட்டப்பெற்றிருக்கும் சிறந்த பாடல்களும் படிப்போருடைய மனத்தைக் கவர்ந்து இன்புறுத்துமென்று எண்ணுகிறேன். இதனை இயற்றியவர் வடமொழியிலும் தென்மொழியிலும் நல்ல பயிற்சியுள்ளவரென்பது இதைப் படிக்கும்போது புலனாகின்றது. வசனநூல்களைப் படிக்க விரும்புவோர் இதனை வாங்கிப்படிப்பார்களாயின், இந்த நூலாசிரியரால், இதுபோன்ற இன்னும் சில நூல்களைத் தமிழ்நாடு பெற்று மகிழ்வடையுமென்று நினைக்கிறேன்."—**மஹாமஹோபாத்தியாய பிரஹ்மஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள், தமிழ்ப்பண்டிதர், பிரஸிடென்ஸி காலேஜ், சென்னை.**

---

"பிரகலாதாழ்வான்சரிதை:—இது, வேலூர் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத்-பு. க. ஸ்ரீநிவாஸாசாரியாரவர்களால் கல்வியிற் பெரியாரென்று கற்றவர்போற்றும் நற்றவப்புலவராகிய கம்பநாட்டாழ்வாரருளிச்செய்த இராமாயணத்திற் கூறிய பிரகலாதாழ்வான் கதையைக் கற்பவருள்ளங் களிகொள்ளுமாறு சொன்னயமும் பொருணயமும் பக்திரசமுந் தோன்ற இனிய செந்தமிழ்நடையி லெழுதப்பெற்றது. இதைச் சிறுவர்கட்குஞ் சிறுமியர்கட்குங் கலாசாலைகளிற் பாடமாக வேற்படுத்தின் மிக்கநன்மை பயக்குமென்ப தெமது துணிபு."—செந்தமிழ்.

ஸ்ரீ

# குமரேச சதகம்

(சிறுவர்க்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுட்டிரட்டு)

[அரும்பதவுரையுடன்]

---


வேலூர் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

பு. க. ஸ்ரீநிவாஸாசாரியரால்



வேலூர்

சுந்தர விநாயகர் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது


---




1912

விலை அணு இரண்டரை

# முகவுரை

---

அரிய பெரிய நீதிகளையும் மற்றுஞ்சில விஷயங்களையும் சிறுவர்க்கு ஏற்ற எளிய நல்ல செய்யுள்நடையில் தெரிவிக்கும் சிறந்த நூலாகிய இக்குமரேசசதகம், பல சிறுபள்ளிக்கூடங்களிற் கற்பிக்கப்பட்டுவருதல் யாவரும் அறிந்ததே. இந்நூல் கற்பிக்கப்படுதல் மிகவும் நன்றே. ஆயின், இச்சிறந்த நீதிநூல் கற்பிக்கப்படும் முறையோ குறையுற்றிருக்கின்றது: அஃதாவது இந்நூலுக்குத் தக்க உரையின்மையாலோ பிறகாரணங்களாலோ மாணுக்கர்கள் பொருளறியாமற் செய்யுள்களைப் பாடம்பண்ணும்படி கற்பிக்கப்படுதலேயாம்.

இக்குறையோடு, பிழையில்லாத நல்ல சுத்தப்பதிப்புப்புஸ்தகம் தக்கஉரையுடன் கூடியது கிடைக்காமல், அச்சுக்கு ஏற்காத விகாரமான காகிதமும் பிழைகள்மலிந்த விரும்புதற்காகாத அச்சும் சிறவாத உரையும் உள்ள புஸ்தகம் கிடைத்தலால் ஆகுங் குற்றங் குறையுஞ் சேர, இந்நூற்படிப்பு எவ்வளவு தாழ்ந்தநிலையில் இருக்குமென்பது யாவரும் அறியக்கூடியதே.

இங்ஙனம் இந்நூற்கல்வி மிகவும் சீர்க்கேடு அடைந்துள்ள நிலையில், அறிஞர் சிலர், இவற்றையெல்லாம் ஆலோசித்து, குற்றங் குறைகள் அகன்ருல் இந்நூற்கல்வி சிறக்குமென அறிந்து, நீதிநூற் படிப்பு முக்கியமாகப் பள்ளிக்கூடங்களில் இருக்கவேண்டுமென்றும், மற்றும், பெற்ருேர்கள் தம்மக்கள் இந்நூலையும் வேறு சில நூல்களையும் படிக்கவேண்டுமென்று விரும்புதலின் அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுதற்காகவும் இந்நூல் பாடபுத்தகமாக வேண்டுமென்றுங் கருதி, என்னை அபிமானித்து இந்நூலையும் மற்றுஞ்சில நூல்களையும் தக்க அரும்பதவுரையோடு நல்ல சுத்தப்பதிப்பாக வெளியிட்டுத்தருதல் நலமென அன்புடன் உரைத்தமையின், இந்நூலை அவர்கள்கருத்திற்கேற்ப வெளிடலானேன்.

இப்புத்தகத்தில், சிறுவர் கற்றற்கு ஏற்காத சிங்காரரஸ விஷயங்களும் மற்றுஞ்சில இடக்கர்களும் அடங்கிய பாடல்கள் விலக்கப்பட்டன.

செய்யுள்களுக்குப் பதவுரை கருத்துரை முதலியனவெல்லாம் விவரமாகச் சேர்த்தால் அதனால் படிப்பவர்க்கு நூல் மிக எளிதாயிருக்குமாயினும், அங்ஙனஞ்செய்தலில் கற்பவர்கள் யாதொரு தன் முயற்சியு மின்றி வெறுங் குருட்டுப்பாடமாக நெட்டுருச்செய்து அதனால் அறிவு நிரம்பப்பெறாரென்று அறிஞர் பலர் கருதுகின்றனராதலின், இன்றியமையாததும் சுருக்கமும் கூடியவரையில் தெளிவுமான அரும்பதவுரைமாத்திரம் எழுதிச் சேர்த்திடலானேன். கடினமான சிற்சில இடங்களிற் கருத்துரையும், சிற்சில இடங்களில் மேற்கோள்களும் காட்டப்பட்டுள்ளன.

இந்நூலிலுள்ளசெய்யுட்கருத்துக்கள் மிகச்சிறந்தனவாதலின், பெரிய கலாசாலைகளிற் கற்கும் மாணாக்கர்களும் பிறருங்கூட இந்நூலைப் படித்தறிதல் தகும்.

கல்வித்துறையிலுள்ள அதிகாரிகளும் சிறு பள்ளிக்கூடங்களிலும் பெரிய கலாசாலைகளிலுமுள்ள உபாத்தியாயர்களும் தமிழ்ப் பண்டிதர்களும் இப்புத்தகத்தை அபிமானித்து, எனக்கு ஊக்கந் தரும்உதவி புரிவார்களென எதிர்பார்க்கின்றேன்.

இந்நூற்பதிப்பு இன்னுஞ் சீர்திருந்துதற்காக உபாத்தியாயர்களும் மற்றும் அறிஞர்களும் தகுதியாக வெளியிடும் அபிப்பிராயங்களெல்லாம் வந்தனத்தோடு ஏற்றுக்கொள்ளப்பட்டு, அடுத்தபதிப்பில் அத்தகைய சீர்திருத்தம் செய்யலாகும்.

வேலூர்
1912௵ ஸெப்டம்பர்௴ 5௳

பு. க. ஸ்ரீ.

ஸ்ரீ

# குமரேச சதகம்

இந்நூல், ‘குமரேச’ என்ற சுப்பிரமணியக் கடவுளது திருநாமம் அமைத்துப் பாடப்பெற்ற நூறுசெய்யுள்கொண்ட ஒரு பிரபந்தமாதலால், ‘குமரேசசதகம்’ என்றபெயருடையதாயிற்று. இந்நூலின் செய்யுள் ஒவ்வொன்றிலும், “மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடுமலை மேவு குமரேசனே” என்பது மகுடமாக அமைக்கப்பட்டிருத்தல் காண்க. ‘குமரேச சதகம்’ என்ற தொடர்—குமரேசனைப்பற்றிய சதகமெனவும், குமரேசனது சம்பந்தமான [குமரேசன் விஷயமான] சதகமெனவும் விரியும். குமாரேச என்பது குமரேச என விகாரப்பட்டது. அது, குமார—ஈச என்று பிரியும்; சுப்பிரமணியனாகிய கடவுள் எனப் பொருள்படும். குமாரனென்ற வடமொழிப்பெயர்—கு+மார என்று பிரிந்து, (கு-குற்சிதம், மாரன்—மன்மதன்) மன்மதனையுங் குரூபமுடையவனென்னும்படி யாக்குகின்ற கட்டழகுடையவனென்று காரணப் பொருள்படும்.

சதகம் என்பது-தொண்ணூற்றாறுவகைத் தமிழ்ப்பிரபந்தங்களுள் ஒன்று. அதன் இலக்கணம்-அகப்பொருளொன்றன்மேலாவது புறப்பொருளொன்றன்மேலாவது நூறு செய்யுள் கூறுதல். (அகப்பொருள்-சிற்றின்பம். புறப்பொருள் - மற்ற விஷயங்கள்.) இந்நூல் - பலவகை நீதிகளையும், சில சரித்திரங்களையும் மற்றும் பலவகை இயல்புகளையும் விளக்குதலால், புறப்பொருளின்மேற் கூறியதாம். சதம் - நூறு; அது, ‘க’ என்னும் பிரத்தியயம் பெற்று, சதகமென நின்றது.

இந்நூல் - ஆசிரிய விருத்தத்தா லமைந்தது. திருப்புல்வயல் என்ற தலத்தில் மலையின்மீது எழுந்தருளியுள்ள பாலசுப்பிரமணியரென்னுந் திருநாமமுடைய முருகக்கடவுளின்மேற் பாடப்பட்டது. திருப்புல்வயல் என்ற தலம் சோழநாட்டி லுள்ளதென்று இந்நூற் செய்யுள்கள் சிலவற்றால் அறியலாம். சுப்பிரமணிய சுவாமியினிடத்து மிக்கபக்தியோடு அப்பெருமானைப் பிரபந்தத்தலைவனாக வைத்துப் பாடப்பட்ட இந்நூல் தத்துவஞானத்தையும் சிறந்த பதவிகளையும் முடிவில் முத்தியையுந் தரவல்லதென்ற தன்மையை, "பன்னரிய புல்வயலில் வாலகுமரேசர்மேற் பரிந்து குருபாததாசன் பாங்கான தமிழாசிரிய விருத்தத்தினறைபாட லொருநூறும் நாடி, நன்னயமதாகப் படித்தப்பேர் கேட்டபேர் நாடோறுங் கற்றபேர்கள் ஞானயோகம் பெறுவர் பதவியாவும் பெறுவர் நன்முத்தியும் பெறுவரே" என்று இந்நூலின் ஈற்றுச்செய்யுளிற் கூறியது கொண்டு அறிக.

## நூலாசிரியர்

இக்குமரேசசதகத்தை இயற்றியவர் குருபாததாசர் என்பது மாத்திரம் இந்நூலின் ஈற்றுச்செய்யுளினால் விளங்குகிறது. இவருடையசரித்திரம் முதலிய விவரம் யாதும் தக்கஆதாரத்தோடு விளங்கவில்லை. இவர்காலம் ஏறக்குறைய 160-வருஷங்களுக்கு முன்பு என்பர். இவர் சுப்பிரமணியபக்தியை மிகுதியாகவுடையவர் என்பது, இந்நூலினால் நன்கு விளங்கும். இவர்மதம் சைவமென்பது, இந்நூலிலுள்ள செய்யுள்கள் பலவற்றால் வெளிப்படையாகத் தெரிகின்றது.

இந்நூலின் சம்பந்தமாகப் புலவர்கள்சிலர் தெரிவிப்பது:— 'புல்வயல்' என்பது, இப்பொழுது புதுக்கோட்டை சம்ஸ்தானத்தைச்சேர்ந்துள்ளதோரூர். இதில் ஒருமலையும் அதில் முருகக்கடவுளின் ஆலயமும் உண்டு. அவ்வாலயம் மிகப் பிரசித்திபெற்றது. அதற்கு அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழும் உண்டென்பர். இவ்வூரிலேஇருந்து குமரேசசதகஞ்செய்த குருபாததாசருடைய

இயற்பெயர், முத்துமீனாட்சிக்கவிராயர் என்பது. இவர், பாரம்பரைச் சைவவேளாளர். இப்புலவர், மேற்கூறிய பாலசுப்பிரமணியக்கடவுளின்மேல் இக்குமரேசசதகம் ஒன்றையேயன்றி இன்னும்பலபிரபந்தங்களையுஞ் செய்தனரென்று கேள்வி. இவரது புத்திரபாரம்பரையோர் மேற்குறித்த புல்வயலிலும், இவரது புத்திரியின்பாரம்பரையோர் சேலத்தைச்சேர்ந்த சார்வாய் என்னும் ஊரிலும் இப்பொழுதும் இருக்கின்றார்கள். மேற்குறித்த சார்வாய் என்னும் ஊரில் தொண்ணூற்றுச்சொச்சம்பிராயம்வரையி லிருந்து சமீபகாலத்தில் தேகவியோகமடைந்தவரும், சிறந்த தமிழிலக்கிய இலக்கணங்களில் மிக்கபரிசய முள்ளவரும், தனிச்செய்யுள்செய்தலிலும் பிரபந்தங்களியற்றுதலிலும் வசைகவிபாடுதலிலும் மிகுதேர்ச்சியுடையவருமாகிய கதிர்வேற்கவிராயர் என்பவர், இவரது புத்திரிபாரம்பரையோர். கடம்பர்கோவில் மதுரைநாயகம்பிள்ளையென்னுஞ் சிறந்த புலவரும், இவர்பாரம்பரையினரே.'

இந்நூலாசிரியர், தமிழ்ப்பாஷையினிடத்து மிக்கஅபிமானமுடையவர்.

## காப்பு

பூமேவு புல்லைப் பொருந்து குமரேசர்தம்மேல்
தேமேவிய சதகஞ் செப்பவே—கோமேவிக்
காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகரக்
காக்குஞ்சரவணத்தான் காப்பு.

காப்பு என்பது, தாம் தொடங்குகிற நூல் இடையூறில்லாமல் இனிது முடிதற்பொருட்டு (உயர்ந்தோர் வழக்கத்தின்படியே) கவியினாற் கூறப்படும் கடவுள்வணக்கச்செய்யுள். இங்ஙனம் கடவுள் வணக்கங் கூறுவதனால், எடுத்தகாரியம் இனிதுமுடியுமென்பது கருத்து. இக்காப்பு, தம்மைச் சரணமடைந்தவர்கள் தொடங்கும் தொழில்களுக்கு வரும் விக்கினங்களை (இடையூறுகளை)ப்போக்கு

தலாலும், தம்மையடையாது அகங்கரித்தவர்களுக்கு விக்கினங்களை யாக்குதலாலும் விக்கினேசுவரரென்னும் திருநாமம்பெற்றுள்ள வரும் பரமசிவனது மூத்த திருக்குமாரருமான ஸ்ரீ விநாயகமூர்த்தி யையும், அவரது திருத்தம்பியாரான சுப்பிரமணியமூர்த்தியையும் ... றியது.

(இதன்பொருள்) பூ மேவு - அழகுபொருந்திய, புல்லை - திருப் புல்வயல் என்ற தலத்தில், பொருந்து - எழுந்தருளியுள்ள, குமரே சர் தம்மேல் - குமாரசுவாமியின்மேல், தேம் மேவிய சதகம் செப்ப - இனிமைபொருந்திய சதகம்என்னும் பிரபந்தத்தைப் பாடுதற்கு,— கோ மேவி - தலைமைபொருந்தி, காக்கும் - (எல்லாவுயிர்களையும்) பாதுகாக்கிற, சரவணத்தான் - சரவணமென்னும் நாணற்காட்டில் தோன்றியதலால் சரவணபவன் என்னும் திருநாமமுடைய முருகக் கடவுளும், கம்பம் - அசையுந்தியல்புடையதும், கும்பத்து - குடம் போன்ற மத்தகத்தையுடையதும், ஐந்து கரம் - ஐந்துகைகளையுடை யதும், கா - சோலையிற் பயில்வதுமாகிய, குஞ்சரம் - யானைபோன்ற, வணத்தான் - வடிவத்தை யுடையவருமாகிய விநாயகக்கடவுளும், காப்பு - பாதுகாவலாவர்; (என்றவாறு.)

புல்வயல் என்பது, புல்லை என மருஉவாயிற்று. கோ மேவி காக்கும் - தேவலோகத்தை விரும்பிப் பாதுகாக்கிற எனினுமாம். தேவசேநாபதியாய் அசுரர்களை யழித்துத் தேவர்களை காத்ததனால்; கோ - தேவலோகம். குமாரக்கடவுள் நாணற்காட்டில் தோன்றிய வரலாறு கேட்டறிக; விரிப்பின் பெருகும். கம்பம் என்பதற்கு - கம் பத்தில் கட்டிவைக்கத்தக்க என்றும் பொருள்கொள்ளலாம்; மத யானையென்பது கருத்து. இயல்பாகிய நான்குதிருக்கரங்களோடு யானைவடிவத்துக்கு உரியதான துதிக்கையும் ஆக ஐந்துகரங்கள் காண்க. ஐந்து கரம் கா - ஐந்துகைகளாகிய ஐந்துகற்பகவிருட்சங் களையுடையவென்றுங் கொள்ளலாம்; கா - சோலை: இங்கே மரத் தைக் குறிக்கலாம். கருதியவை தருதலால், கரம், கற்பகமெனப் பட்டன. விக்கினநிவிருத்தியின்பொருட்டு விநாயகரை* முதலிற்

கூறுதல் பொருந்துமாயினும், இந்நூலாசிரியர் முருகக்கடவுளை முந்நிலைவைத்தது, அவரது சுப்பிரமணியபக்தி விசேஷத்திரு லென்க. அன்றியும், விநாயகர் வழிபடுகடவுள்மாத்திரமேயாக, சுப்பிரமணியர் அதனோடு இந்நூலுக்கு ஏற்புடைக்கடவுளுமாய் முன் நிற்றற்கு உரிமைபெறுதல் காண்க.

இச்செய்யுளில் பின்னிரண்டடியில் 'காக்குஞ் சரவணத்தான்' என்றதுவரையில் எழுத்து ஒத்திருக்கச் சொல்லும் பொருளும் வேறுபட்டது, மடக்கு என்னுஞ் சொல்லணி; இது, வடமொழியில் யமகம் எனப்படும்.

## அவையடக்கம்

மாரிக்கு நிகரென்று பனிசொரிதல்போலவு
மலைக்கு நிகரென்று சிறுபெண்
மணல்வீடு கட்டுவதுபோலவுஞ் சந்திரன்முன்
மருவு மின்மினிபோலவும்
பாருக்கு ணல்லோர்முனே பித்தர் பலமொழி
பகர்ந்திடுஞ் செயல்போலவும்
பச்சைமயி லாடுதற் கிணையென்று வான்கோழி
பாரி லாடுதல்போலவும்
பூரிக்கு மினியகாவேரிக்கு நிகரென்று
போது வாய்க்கால்போலவும்
புகல்சிப்பி முத்துக்கு நிகராப் பளிங்கைப்
பொருந்த வைத்ததுபோலவும்
வாரிக்குமுன் வாவி பெருகல்போலவு மின்சொல்
வாணர்மு னுகந்து புல்லை
வாலகுமரேசர்மேற் சதகம் புகன்றனன்
மனம்பொறுத் தருள் புரிகவே.

அவையடக்கம் - கற்றோர்சபைமுன் கவி தன்னைத் தாழ்த்திக் கூறுதல். மாரி - மழை. நிகர் - ஒப்பு. மருவும் - பொருந்திய.

பாருக்குள் - பூமியில். பகர்ந்திடும் - பேசும். இணை - ஒப்பு. பூரிக்கும் - பெருகும். போது - செல்லுகிற. புகல் - (சிறப்பித்துச்) சொல்லப்படும். பளிங்கு - படிகக்கல். பொருந்த - (சமானமாகப்) பொருந்த. வாரி=வாரிதி: கடல். வாவி - தடாகம். இன் சொல் வாணர் - இனியசொற்களையுடைய கவிவாணர்; கவிஞர் என்க. வால என்பது, பால என்னுஞ் சொல்லின் விகாரம். புகன்றனன் - கூறினேன். அருள் புரிக - கிருபைசெய்க.

## நூல்

### குமரேசர் மகிமை

பூமிக் கொராறுதலையாய் வந்து சரவணப்
பொய்கைதனில் விளையாடியும்
புனிதர்க்கு மந்த்ரவுபதேசமொழி சொல்லியும்
போதனைச் சிறையில் வைத்தும்
தேமிக்க வரியரப் பிரமாதிகட்குஞ்
செயிக்கமுடியா வசுரனைத்
தேகங் கிழித்து வடிவேலினா லிருகூறு
செய் தமரர்சிறை தவிர்த்தும்
நேமிக்கு ளன்ப ரிடருற்ற சமயந்தனி
னினைக்குமுன் வந்துதவியும்
நிதமு மெய்த்துணையாய் விளங்கலா லுலகிலுனை
நிகரான தெய்வமுண்டோ
மாமிக்க தேன்பருகு பூங்கடம் பணியுமணி
மார்பனே வள்ளி கணவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

பொய்கை - மானிடர் ஆக்காத நீர் நிலை. புனிதற்கு - பரிசுத்த மூர்த்தியாகிய சிவபிரானுக்கு. முருகக்கடவுள் தம்தந்தையாகிய சிவ

பிரானுக்கு மந்திரோபதேசஞ்செய்தவரலாறு கேட்டறிக. போதன் - ( திருமாலின் நாபித் ) தாமரைமலரில் தோன்றிய பிரமதேவன். சிறை - காவல். தேமிக்க - தேவர்களிற் சிறந்த; அல்லது, தெய்வத்தன்மை மிகுந்த. அரி - திருமால், அரன் - சிவபிரான். அரியரப் பிரமாதிகட்குஞ் செயிக்கமுடியா வசுரன் - சூரபதுமன். வடிவேல் - கூர்மையான வேலாயுதம். கூறு - பாகம். அமரர் - தேவர். நேமி - பூமி. அன்பர் - பக்தர்கள். இடர் - துன்பம். நிதமும் - எந்நாளும். மா - வண்டு. பூ கடம்பு அணியும் - கடப்பமலர்மாலையை யணிந்த. அணி - அழகு. குகன் = குஹன்; அஞ்ஞானவிருளைப் போக்குபவன்; இது, முருகக்கடவுளது திருநாமம். புல் வயல் - திருப்புல்வயல் என்னுந் தலத்தில். நீடு மலை - பெரியமலையின்மேல். மேவு - எழுந்தருளியிருக்கிற. (1)

### அந்தணரியல்பு

குறையாத காயத்ரியாதி செபமகிமையுங்
கூறுசுருதிப் பெருமையுங்
கோதிலா வாகம புராணத்தின் வளமையும்
குலவு யாகாதி பலவும்
முறையா நடத்தலாற் சகலதீவினைகளையு
முளரிபோலே தகிப்பார்
முதன்மைபெறு சிலைசெம்புபிருதுவிகளிற் றெய்வ
மூர்த்தமுண் டாக்குவிப்பார்
நிறையாக நீதிநெறி வழுவார்க ளாகையா
னீண்மழை பொழிந்திடுவதும்
நிலைமது செழிப்பது மரசர்செங்கோல்புரியு
நிலையு மாதவர்செய் தவமும்
மறையோர்களாலே விளங்கு மிவ்வுலகத்தின்
மானிடத் தெய்வ மிவர்காண்
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

காயத்ரி - ஓர் மந்திரம். கூறு - (சிறப்பித்துச்) சொல்லப்படு கின்ற. சுருதி - வேதம். கோது இலா - குற்றமில்லாத. ஆகமம் - சமயநூல். சுருதி பெருமையும் - வேதப்பொருளையுணர்ந்த சிறப்பும். ஆகமம் புராணத்தின் வளமையும்- ஆகமபுராணங்களின் பொருளைத் தேரும் சிறப்பும். குலவு - விளங்குகின்ற. முளரி - அக்கினி. சிலை - கல். பிருதிவி - மண். தெய்வம் மூர்த்தம் - தெய்வஸ்வரூபம். நெறி - வழி. வழுவார்கள் - தவறார்கள். நீள் - மிக்க. செங்கோல்- நேர்மையான அரசாட்சி. மறையோர் - வேதம்வல்ல அந்தணர். மானிடத்தெய்வம் - மனிதர்களில் தெய்வத்தன்மையுள்ளவர்கள். பூதேவர் என்பது, அந்தணர்க்கு ஓர் பெயர். (2)

## அரசரியல்பு

குடிபடையி லபிமான மந்திராலோசனை
குறிப்பறிதல் சத்ய வசனங்
கொடைநித்த மவரவர்க் கேற்றமரியாதை பொறை
கோடாத சதுருபாயம்
படிவிசாரணையொடு ப்ரதானி தளகர்த்தரைப்
பண்பறிந்தே யமைத்தல்
பல்லுயிரெலாந் தன்னுயிர்க்கு நிகரென்றே
பரித்தல் குற்றங்கள் களைதல்
துடிபெறு தனக்குறுதியான நட்பகமின்மை
சுகுணமொடு கல்வி யறிவு
தோலாத காலமிட மறிதல் வினைவலிகண்டு
துஷ்டநிக்ரக சௌரியம்
வடிவுபெறு செங்கோ னடத்திவரு மரசர்க்கு
வழுவாத முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

குடி - பிரஜைகள். படை - படைவீரர், சைனியம். மந்திர ஆலோசனை - (இராஜாங்ககாரியங்களை) இரகசியமாக ஆலோசித்தல். நித்தம் - நித்யம். பொறை - பொறுமை. கோடாத - கோணாத. சதுர் உபாயம் - (அரசர்க்கு வேண்டிய) நால்வகை உபாயங்கள்: அவை - ஸாமம், தானம், பேதம், தண்டம் என்பன. படி - பூமி. தளகர்த்தர் - சேனைத்தலைவர். பண்பு - குணம், ஸ்வபாவம். அமைத்தல் - ஏற்படுத்துதல். பல் உயிர் எலாம் தன் உயிர்க்கு நிகர் என்றே பரித்தல் - மன்னுயிரைத் தன்னுயிர்போற் கருதிக் காத்துத் தாங்குதல். துடி பெறு-மேன்மையுடைய. நட்பு - நண்பர்களை உடைமை. அகம் இன்மை - நான்என்னுஞ் செருக்கு [அஹங்காரம்] இல்லாமை. சுகுணம்-நற்குணம். துஷ்ட நிக்ரஹம்-தீயோர்களைத்தண்டித்தலும், கொல்லுதலும். வடிவு பெறு - அழகுடைய. வழுவாத - தவறாத. முறைமை - உரிய நிலைமை, லக்ஷணம். (3)

வணிக ரியல்பு

கோண்டபடிபோலும் வில்லைபேசி லாபஞ்சிறிது
கூடிவர நய முரைப்பார்
கொள்ளு மொருமுதலுக்கு மோசம்வராதபடி
குறுகவே செலவு செய்வார்
வண்டப் புரட்டர்தா முறிதந்து பொன்னடகு
வைக்கினுங் கடனீந்திடார்
மருவுநாணயமுளோர் கேட்டனுப்புகினு மவர்
வார்த்தையி லெலாங் கெர்டுப்பார்
கண்டெழுது பற்றுவரவினின் மயிர் பிளந்தே
கணக்கி லணுவாகிலும் விடார்
காசு வீணிற் செலவிடா ருசிதமானதிற்
கனதிரவியங்கள் விடுவார்
மண்டலத்தூடு கனவர்த்தகஞ் செய்கின்ற
வணிகர்க்கு முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

குறுகவே - சொற்பமாகவே. வண்டப்புரட்டர் - துஷ்டத்தன் மையுள்ள வஞ்சகர்கள். வண்டத்தனம் - துடுக்குத்தனம்; இச்சொல், இந்நூலின் 75-ஆம் செய்யுளிலும் 'வண்டப்பாத்தையர்' எனப் பயின் றுள்ளது. புரட்டர் - பொய்பேசுபவர்; சொன்னசொல் தவறுவோர்; வாக்குநாணய மில்லாதவர்: மோசக்காரர். முறி தந்து - சீட்டு எழுதிக்கொடுத்து. அடகு - ஈடு. மருவு - பொருந்திய. நாணயம்- சொன்னசொல் தவறாதுநடத்தல்; நம்பிக்கைக்கு இடமான தன்மை. பற்று வரவு - கொடுக்கல் வாங்கல். பற்று - தம்மிடத்தினின்று பிறர் பொருளைப் பெற்றுக்கொண்ட விவரம் குறிப்பது. வரவு - பிறரிடத்தினின்று தமக்குப் பொருள்வந்த விவரம் குறிப்பது. மயிர் பிளந்தே - மயிரை இருபிளவாகக் குறுக்கேபகிர்ந்தவளவு நுண்ணிய தொகையையுங் காட்டி. அணு - மிகச்சிறிது. உசிதம் - தகுதி, பயனுள்ளது. மண்டலத்தூடு - உலகத்திலே. (4)

## வேளாளரியல்பு

நல்ல தேவாலயம் பூசனை நடப்பதும்
நாடோறு மழைபொழிவதும்
நாடிய தபோதனர்கண் மாதவம் புரிவதும்
நவில்வேத வேதிய ரெலாஞ்
சொல்லரிய யாகாதி கருமங்கள் செய்வதுந்
தொல்புவி செழிக்கு நலமுஞ்
சுபசோபனங்களுங் கொற்றவர்கள் செங்கோ
லுலங்கு மனுநெறி முறைமையும்
வெல்லரிய சுகிருதமொடு வர்த்தகன் கொள்விலையும்
விற்பனையு மதிக புகழும்
மிக்கவதிகாரமுந் தொழிலாளர் சீவனமும்
வீரரண சூர வலியும்
வல்லமைகள் சகலமும் வேளாளர் மேழியின்
வாழ்வினுன் விளைவ வன்றோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

நாடோறும் - நாள்தோறும். நாடிய - கடவுளைத் தியானிக்குந் தன்மை யுள்ள. தபோ தனர்கள் - தவத்தையே செல்வமாகவுடைய வர்கள். நவில் - (சிறப்பித்துச்) சொல்லப்படுகிற. வேத வேதியர் - வேதம்வல்ல அந்தணர். சொல் அரிய - சொல்லுதற்கு அரிய சிறப் புடைய. கருமங்கள் - காரியங்கள். தொல் புவி - பழைய பூமி. நலம் - நன்மை. சுப சோபனங்கள் - பலவகையான மங்களகாரியங் கள். கொற்றவர்கள் - வெற்றியுடைய அரசர்கள். துலங்கும் - விளங்கும். மனு நெறி முறைமை - மநுதர்மசாஸ்திரத்திற் கூறப் பட்ட சன்மார்க்கத்தின் கிரமம். வெல் அரிய - ஜயித்தற்கு அருமை யான. சுகிருதம் - நல்வினை, புண்ணியம். சீவனம் - பிழைப்பு. ரணம்-போர். வேளாளர் - உழுதுபயிரிட்டு உணவுப்பொருள்களைத் தரும் உபகாரிகளாகிய சூத்திரர். மேழி - கலப்பையின் கைப்பிடி. விளைவ - உண்டாவன. (5)

### பிதாக்கள்

தவமதுசெய்தே பெற்றெடுத்தவன் முதற்பிதா
தனை வளர்த்தவ னொருபிதா
தயையாக வித்தையைச் சாற்றினவ னொருபிதா
சார்ந்த சற்குரு வொருபிதா
அவமறுத் தாள்கின்றவர சொருபிதா நல்ல
வாபத்து வேளைதன்னி
லஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோ னொருபிதா
வன்புள முனோ னொருபிதா
கவளமிடு மனைவியைப் பெற்றுளோ னொருபிதா
கலிதவிர்த்தவ னொருபிதா
காசினியி லிவரை நித்தம் பிதாவென்றுளங்
கருதுவது நீதியாகும்
மவுலிதனின் மதியரவு புனைவிமல ருதவுசிறு
மதலையெனவரு குருபரா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

வித்தையை சாற்றினவன் - கல்வியைச் சொல்லிக்கொடுத்த ஆசிரியன். சார்ந்த சத்குரு - சிறப்பமைந்த நல்ல (தத்துவஞானத்தை உபதேசித்த) ஆசிரியன். அவம் - தீங்குகள். நல்வ ஆபத்து - கொடியதுன்பம். அஞ்சல் - பயப்படாதே. உற்ற - நேர்ந்த. முன்னோன் என்பது, முனோன் எனத் தொகுத்தல்விகார மாயிற்று. முனோன் - தமையன். கவளம் - வாய்கொள்ளும் உணவு. கலி - தரித்திரம். காசினி - பூமி. நித்தம் - நித்யம்; எப்பொழுதும். உளம் - மனம். மவுலி - திருமுடி. மதி - சந்திரன். அரவு - நாகம். புனை - தரித்த. விமலர் - குற்றமற்ற சிவபிரான். உதவு - பெற்ற. சிறு மதலை - இளையகுமாரன். குரு பரா - சிறந்த ஆசிரியனே! முருகக்கடவுள் ஒருகால் தம்தந்தையாகிய சிவபிரானுக்குப் பிரணவப் பொருளை உபதேசித்தனராதலால், அவரை, 'குருபரா' என விளித்தார்; அன்றியும், தமிழ்க்கு முதலாசிரியராகிய அகத்தியனார்க்குத் தமிழையும் தத்துவஞானத்தையும் உபதேசித்த தலைமையை உட்கொண்டு இங்ஙனம் விளித்தாரென்றுங் கொள்ளலாம். (6)

ஒன்றை யொன்று பற்றியிருப்பன

சத்தியந் தவறா திருப்பவ ரிடத்தினிற்
சார்ந்து திருமா திருக்குஞ்
சந்ததந் திருமா திருக்கு மிடந்தனிற்
றனதுபாக்கிய மிருக்கும்
மெய்த்துவரு பாக்கிய மிருக்கு மிடந்தனில்
விண்டுவின்களை யிருக்கும்
விண்டுவின்களை பூண்டிருக்கு மிடந்தனின்
மிக்கான தயை யிருக்கும்
பத்தியுட னினியதயை யுள்ளவ ரிடந்தனிற்
பகர்தரும மிகவிருக்கும்
பகர்தரும முள்ளவ ரிடந்தனிற் சத்துரு
பலாயனத்திற லிருக்கும்
வைத்திசை மிகுந்ததிற லுள்ளவ ரிடத்தில் வெகு
மன்னுயிர் சிறக்கு மன்றோ

மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

சார்ந்து - அடுத்துப்பொருந்தி. திருமாது - இலக்குமி. சந்ததம் - எப்பொழுதும். அவிடம் - அவ்விடம். மெய்த்து - நிச்சயம் பொருந்தி; நிச்சயமாக. விஷ்ணுவென்பது, விண்டுவெனத் திரிந்து நின்றது. களை—கலை - அம்சம், இது சாந்தி, அழகு, ஒளி என்னும் பொருளையுந் தரும். மிக்கான - மிகுதியான. தயை - அருள். பகர் தருமம் - சிறப்பித்துச்சொல்லப்படும் அறம். சத்துரு பலாயனம் திறல் - பகைவர் புறங்காட்டியோடத்தக்க வலிமையும் தைரியமும். இசை - புகழ். வெகு மன் உயிர் சிறக்கும் அன்றோ - பலவாகிய நிலை பெற்ற ஜீவராசிகள் சிறந்துவாழுமன்றோ. (7)

## இவர்க்கிவர் தெய்வமெனல்

ஆதுலர்க் கன்னங் கொடுத்தவர்களே தெய்வ
மன்பான மாணுக்கருக்
கரியகுருவே தெய்வ மஞ்சினோர்க் காபத்
தகற்றினோனே தெய்வமாம்
காதலுறு கற்புடைய மங்கையர்தமக்கெலாங்
கணவனே மிக்க தெய்வம்
காசினியின் மன்னுயிர்தமக்கெலாங் குடிமரபு
காக்குமன்னவர் தெய்வமாம்
ஓதரிய பிள்ளைகட் கன்னைதந்தையர் தெய்வ
முயர்சாதி மாந்தர் யார்க்கு
முறவின்முறையார் தெய்வம் விசுவாச முள்ள
குற்ற சிவபத்தர் தெய்வம் [பேர்க்
மாதயையினுற் சூத்திரர்க்கு மறையோர் தெய்வம்
வானவர்க்குத் தெய்வ நீ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

ஆதுலர் - தரித்திரர். காதல் உறு - ஆசைமிகுந்த. கற்பு - பதிவிரதாதருமம். மிக்க - சிறந்த. குடி - பிரசைகள். மரபு - வம்சம். ஓது அரிய - மேலாகச் சொல்லப்படும் அருமையான நற்குணங்கள் பொருந்திய. அன்னை - தாய். மாந்தர் - மனிதர். விசுவாசம் - சிறந்த நம்பிக்கை. உற்ற - (மேன்மை) பொருந்திய. சிவ பத்தர் - சிவனடியார். மா தயையினால் - சிறந்த அருளுடைமையால்; இதனாலேயே பிராமணர் அந்தணர் என்னும் பெயர் பெற்றனர். மறையோர் - வேதம்வல்ல அந்தணர். வானவர் - தேவர். (8)

இப்படிப்பட்டவரிவரெனல்

நியாயநெறி தவறுமல் உலக பரிபாலனை
நடத்துமவனே யரசனும்
நிருபர்யோசனைதெரிந் துறுதியாகிய செய்தி
நவிலுமவனே மந்திரி
நேயமுடனே தன் சரீரத்தை யெண்ணாத
நிர்வாகியே சூரனும்
நிலைபெறு மிலக்கண மிலக்கிய மறிந்துசொலு
நிபுணகவியே கவிஞனும்
ஆயதொரு வாகடந் தாதுவி னிதானமு
மறிபு முதியோன் வைத்திய
னகமின்றி மெய்யுணர்ந் தைம்புல னொழித்துவிட்
டவனே மெய்ஞ்ஞானி யெனலாம்
மாயவர் சகோதரி மனோன்மணிக் கன்பான
வரபுத்ர வடிவேலவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

நெறி - வழி, முறைமை. பரிபாலனம் - பாதுகாத்தல், நன்றாக ஆளுகை. நிருபர் - அரசர். உறுதி - நன்மைதருவன. நவிலுமவன் - கூறுபவன். நேயமுடனே - அபிமானங்கொண்டு. நிர்வாகி - போர்த்

தொழிலில் திறமுள்ளவன். கவிஞன் - கவிபாடவல்லவன். ஆயது ஒரு வாகடம் - தகுதியானதொரு வைத்தியசாஸ்திரம் தாதுவின் நிதானம் - நாடியினுடைய நிலைமை. முதியோன் - அனுபவம்முதிர்ந் தவன். அகம் இன்றி - அகங்காரமில்லாமல். மெய் உணர்ந்து - தத்துவஞானத்தாற் பொருள்களின் நிலைமையை உள்ளபடி யறிந்து. ஐம்புலன் ஒழித்துவிட்டவனே - ஐம்புலவாசைகளை அகற்றிவிட் டவனே. ஐமபுலன்களாவன - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என் பன. மெய்ஞ்ஞானி யென்பான் - பிறப்புமுத்திகளையும் அவற்றின் காரணங்களையும் உண்மையாக அறிந்தவன். மாயவர் - மாயையை யுடையவராகியகண்ணபிரான். சகோதரி-உடன்பிறந்தாள். மனோன் மணியென்பது, உமாதேவிக்கு ஓர்பெயர். வர புத்ர - சிறந்த புதல் வனே. வடி வேலவா - கூர்மையான வேலாயுதத்தையுடையவனே. வடித்தல் - நெருப்பிலிட்டுக் காய்ச்சி யடித்துக் கூராக்குதல். இனி, வடி வேல் - தேர்ந்தெடுத்த வேல் என்றுமாம்; சிறந்தவேலென்பது கருத்து. (9)

விரைந்தடக்கத் தகுவன விவையெனல்

அக்கினியை வாய்மூர்க்க துர்ச்சனரை வஞ்சமனை
யாளை வளர் பயிர்கொள் களையை
யஞ்சா விரோதிகளை யநியாய முடையோரை
யகிருத்தியப் பெண்க ளார்ப்பைக்
கைக்கினிய தொழிலாளியைக் கொண்டவடிமையைக்
களவுசெய்யுந் திருடரைக்
கருதிய விசாரத்தை யடக்கமில் பசிசையைக்
கடிதான கோபந்தனை
மெய்க்கினிதலாப் பிணியை யவையுதாசீனத்தை
வினைமூண்டிடுஞ் சண்டையை
விடமேறு கோரத்தை யன்றடக்குவதலான்
மிஞ்சவிட லாகாது காண்
மைக்கினிய கண்ணி குறவள்ளி தெய்வானையை
மணஞ்செய்த பேரழகனே

மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

வாய் முந்து துர்ச்சனர் - வாய்முந்திப் [பதறிப்] பேசுகிற துஷ்டஜனங்கள். அகிருத்தியம் - தகாதசெய்கை. ஆர்ப்பை - ஆவாரத்தை. கருதிய விசாரத்தை - கருத்திலுண்டாகிய கவலையை. பலிசை - இளம்பெண். கடிது - கடுமையானது. மெய்க்கு இனிது அலா பிணி - தேகத்துக்குச் சுகந்தருவதல்லாத [இன்னாததாகிய] வியாதி. அவை உதாசீனத்தை - சபையிற் பிறர் பற்றின்றிக்கூறிய பழிமொழியை. வினை-தீவினை. கோரம்-கொடுமை. மைக்கு இனிய கண்ணி - மைதீட்டப்பெற்று அதனால் அழகிய கண்களையுடையவள்; இனி, மை - மேகமெனக்கொண்டு, அதனினும்சிறந்த குளிர்ந்த கரிய கண்களையுடையவள் எனினுமாம். தெய்வானை - தெய்வயானை. (10)

இதனை விளக்குவ திதுவெனல்

பகல்விளக்குவ திரவி நிசிவிளக்குவது மதி
பார்விளக்குவது மேகம்
பதிவிளக்குவது பெண் குடிவிளக்குவ தரசு
பரிவிளக்குவது வேகம்
இகல்விளக்குவது வலி நிறைவிளக்குவது நல
மிசைவிளக்குவது சுதி யூ
ரிடம்விளக்குவது குடி யுடல்விளக்குவ துண்டி
யினியசொல் விளக்குவ தருள்
புகல்விளக்குவது கொடை தவம்விளக்குவ தறிவு
பூவிளக்குவது வாசம்
பொருள்விளக்குவது திரு முகம்விளக்குவது நகை
புத்தியை விளக்குவது நூல்
மகம்விளக்குவது மறை சொல்விளக்குவது நிசம்
வாவியை விளக்குவது நீர்
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

இரவி - சூரியன். நிசி - இராக்காலம். மதி - சந்திரன். பார் - பூமி. பதி - வீடு. 'பதிவிளக்குவது பெண்'—"மனைக்கு விளக்கு மடவாள்" என்பது காண்க: இனி, பதி - கணவன் என்பாருமுளர். குடி - பிரஜைகள். பரி - குதிரை. இகல் - போர். நிறை - குண பூர்த்தி; இனி, நிறை - பிறரறியாமல் மனத்திலடக்கப்படுவது என்பாருமுளர். "நிறையெனப்படுவது மறை பிறரறியாமை" என்பது காண்க. நலம் - நன்றி, சிறந்த அழகு. இசை - சங்கீதம். சுதி= ச்ருதி; சுருதிகூட்டலென்பது - முதல் நாதமாகிய ஷட்ஜத்தோடு பஞ்சமமென்னும் ஸ்வரத்தை மனோரஞ்சனமாம்படி சுத்தமாப் பொருத்துதல். குடி - ஜனங்கள். புகல் - அடைக்கலம்புகுந்தவர். வாசம் - வாசனை. திரு - இலக்குமி. நகை - சிரிப்பு. மகம் - யாகம். மறை - வேதம். வாவி - குளம். (11)

### பிறப்பிட நன்மையால் நன்மை பெறுமை

சிங்கார வனமதி லுதிப்பினுங் காகமது
தீஞ்சொல்புகல் குயிலாகுமோ
திரையெறியும் வாவியிற் பூத்தாலுமே கொட்டி
செங்கஞ்ச மலராகுமோ
அங்கானகத்திற் பிறந்தாலு முயலான
தானையின் கன்றாகுமோ
வாண்மையாகிய நல்லகுடியிற் பிறந்தாலு
மசடர் பெரியோராவரோ
சங்காடு பாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
சாலக்கிராம மாமோ
தடமேவு கடனீரிலே யுப்பு விளையினுஞ்
சாரசர்க்கரையாகுமோ
மங்காத செந்தமிழ்க் குறுமுனிக் குபதேசம்
வைத்த மெய்ஞ்ஞான குருவே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

சிங்காரம் வனமதில் - சிங்காரத்தோட்டத்தில். தீம் சொல் - இனியமொழி. புகல் - சொல்லுகிற. திரை எறியும் - அலைவீசும். கொட்டி - கொட்டிப்பூ; கொட்டியென்பது, ஓர்கிழங்குப்பூடு. செம் கஞ்சம் மலர் - செந்தாமரைப்பூ. அம் கான் அகத்தில் - அழகிய காட்டினிடத்தில். சங்கு ஆடு - சங்குகள் பொருந்திய. சாலக்கிராமம் என்பது - தெய்வஸ்வரூபமுள்ள ஓர்வகைச் சிலை. தட மேவு - பெருமைபொருந்திய. சாரம் - சிறந்தஇனிமை. மங்காத - அழியாத. குறுமுனி - குள்ளவடிவமுடைய இருடி; இது, அகத்தியரைக் குறிக்கும். (12)

பலர்க்கும் பயன்படுவன

கொண்டல்பொழி மாரியு முதாரசற்குணமுடைய
கோவு மூருணியி னீருங்
கூட்டமிடு மம்பலத் துறுதருவி னீழலுங்
குடிவளர் விவசாயமும்
கண்டவர்க ளெல்லாம் வரும் பெருஞ் சந்தியிற்
கனிபல பழுத்த மரமுங்
கருணையுடனே வைத்திடுந் தணீர்ப்பந்தலுங்
காவேரிபோ லாற்றமும்
விண்டலத் துறை சந்திராதித்த கிரணமும்
வீசுமாருத சீதமும்
விவேகியெனு நல்லோ ரிடத்திலுறு செல்வமும்
வெகுசனர்க் குபகாரமாம்
வண்டிமிர் கடப்பமலர்மாலையணி செங்களப
மார்பனே வடிவேலவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கொண்டல் - மேகம். மாரி - மழை. உதாரம் சற்குணம் உடைய கோ - ஔதார்யமென்னும் நற்குணமுடைய அரசன். ஔதார்யம் - ஈகைத்தன்மை. ஊருணி - குளம். அம்பலத்து உறு - பல

ஜனங்களுங்கூடும் பொதுவெளியிடத்திற் பொருந்திய. தருவின் நீழல் - விருட்சத்தின் நிழல். சந்தி - பலவழி கூடுமிடம். கனி - பழம். கருணை - அருள். ஊற்றம் - ஊற்று, பிரவாகம். விண் தலத்து - ஆகாயத்தினிடத்தில். உறை - வசிக்கின்ற. சந்திர ஆதித் தர் - சந்திரனும், சூரியனும். மாருதம் -காற்று. சீதம் - குளிர்ச்சி. விவேகி - பகுத்தறிவுடையவன். உறு - பொருந்திய. இமிர் - ஒலிக் கின்ற. செம் களபம் - சிவந்த கலவைச்சந்தனம். (13)

தாமழியினுங் குணமழியாதவை

தங்கமானது தழலினின்றுருகி மறுகினுந்
தன்னொளி மழுங்கிடாது
சந்தனக்குறடுதான் மெலிந்து தேய்ந்தாலுமோ
தன்மணங் குன்றிடாது
பொங்கமிகு சங்கு செந்தழலில் வெந்தாலுமோ
பொலிவெண்மை குறைவுறாது
போதவே காய்ந்து நன்பால் குறுகினாலும்
பொருந்து சுவை போய்விடாது
துங்கமணி சாணையிற் றேய்ந்துவிட்டாலுந்
துலங்குகுண மொழியாது பின்
றொன்மைதரு பெரியோர் மடிந்தாலு மவர்களது
தூயநிறை தவறுகுமோ
மங்களகல்யாணி குறமங்கை சுரகுஞ்சரியை
மருவு திண்புயவாசனே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

மறுகினும் - சுழன்றாலும், தத்தளித்தாலும். மழுங்கிடாது - குறையாது. சந்தனக்குறடு - சந்தனக்கட்டை. குன்றிடாது - குறை யாது. பொங்கம் - பொலிவு. செம் தழலில் - சிவந்த அக்கினியில். பொலி - விளங்குகின்ற. போதவே - மிகவும். குறுகினாலும் - குறைந்

தாலும், சுண்டினாலும். சுவை - உருசி. துங்கம் மணி - உயர்ந்தசாதி இரத்தினம். துலங்கு - பிரகாசிக்கின்ற. தொன்மை தரு - பழமையாகவருஞ் சிறப்புப் பொருந்திய. தூய நிறை - பரிசுத்தமான நிறைகுணம். மங்கள கல்யாணி - சுபகரமான திருக்குணங்களும் திருவுருவமும் வாய்ந்தவள். குறமங்கை - வள்ளியம்மை. சுரகுஞ்சரி - தெய்வயானை. இவ்விருவரும் முருகக்கடவுளுடைய தேவிமாராவர். மருவு - கூடிய. திண்புயம் வாசனே - வலிய தோள்களிற் (கலவைச்சந்தனம் முதலியவற்றாற்) பரிமளமுடையவனே. " அட்டாலும் பால் சுவையிற்குன்றா தளவல்ல, நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர், கெட்டாலு மேன்மக்கள் மேன்மக்களே சங்கு, சுட்டாலும் வெண்மை தரும் ", " அடினு மாவின்பால் தன்சுவை குன்றாது," " அரைக்கினும் சந்தனம் தன்மண மறாது " முதலியன இங்கு அறிக. (14)

## யார்க்கு மனுபோகம் விடாமை.

தேசுபெறு மேரு ப்ரதக்ஷிணஞ் செய்து மதி
 தேகவடு நீங்கவில்லை
திருமா லுறங்கிடுஞ் சேடனுக் குவணன்
 செறும்பகை யொழிந்த தில்லை
ஈசன் கழுத்திலுறு பாம்பினுக் கிரைவே
 றிலாமலே வாயு வாகு
மினிய கண்ணாகிவரு பரிதியானவனுக்
 கிராகுவோ கனவிரோதி
ஆசிலாப் பெரியோ ரிடத்தினி லடுக்கினு
 மமைத்தபடி யன்றி வருமோ
வவரவர்க ளனுபவ மனுபவித்திடல்வேண்டு
 மல்லால் வெறுப்ப தெவரை
வாசவனு மும்பரனைவரும் விசய சயவென்று
 வந்து தொழு தேத்து சரணா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
 மலைமேவு குமரேசனே.

தேசு - ஒளி. மேருவென்பது -தேவர்களுக்கு இருப்பிடமான பொன்மலையாம். மதி - சந்திரன். வடு - களங்கமாகிய அடையாளம். சேடன் - ஆதிசேடனென்னும் ஸர்ப்பராஜன். உவணன் - கருடன். செறும் பகை - கோபித்துக்கொல்லும் விரோதம். (சர்ப்பம் காற்றை உட்கொள்ளுதல்பற்றி அதற்கு ' வாதாசனம் ' என்னும் ஓர் பெயர் உள்ளமை காண்க.) இனிய கண்ணாகி வரு பரிதி - உலகிற்குச் சிறந்தகண்ணாகவுள்ள சூரியன்; இதனால் சூரியனுக்கு 'ஜகச்சக்ஷு:' என்ற ஓர்பெயர் உள்ளமை காண்க; இனி, இறைவனுக்கு வலக்கண்ணாகவுள்ள சூரியன் எனினுமாம். ஆசு இலா - குற்றமில்லாத. வாசவன் - தேவராஜனான இந்திரன். உம்பர் அனைவரும் - தேவர்களெல்லோரும். விசய சய - விசேஷமாக வெற்றிபெறுக வெற்றி பெறுக. ஏத்துசரண - துதிக்கப்பெற்ற திருவடிகளையுடையவனே!

## இதுவின்றி யிது சிறவாதெனல்

குருவிலா வித்தை கூறறிவிலா வாணிபங்
குணமிலா மனைவி யாசை
குடிநலமிலா நாடு நீதியில்லா வரசு
குஞ்சரமிலாத வெம்போர்
திருவிலா மெய்த்திறமை பொறையிலா மாதவந்
தியானமில்லாத நிஷ்டை
தீபமில்லாத மனை சோதரமிலாத வுடல்
சேகரமிலாத சென்னி
உருவிலா மெய்வளமை பசியிலா வுண்டி புக
ழுண்மையில்லாத வசனம்
யோசனையிலா மந்த்ரி தைரியமிலா வீர
முதவியில்லாத நட்பு
மருவிலா வண்ணமலர் பெரியரில்லாத சபை
வையத் திருந்தென் பயன்
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கூர் அறிவு - நுட்பமானவிஷயங்களையும் அறியத்தக்க சூக்ஷ்ம புத்தி; கூர் - மிக்க எனினுமாம். வாணிபம் - வர்த்தகம். குடி நலம் - பிரஜைகளின் நன்மை அல்லது சௌக்கியம்; நலம் - நல்லவளம் எனினுமாம். குஞ்சரம் - யானை. வெம் போர் - கொடிய யுத்தம். திரு - ஐச்வரியம், சம்பத்து. மெய் திறமை - தேகபலம். பொறை - பொறுமை. மா தவம் - சிறந்த தவம். சோதரம் - உடன்பிறப்பு. " மாறில் உடன்பிறப்பில்லா உடம்பு பாழ் " என்பது காண்க. சேகரம் - தலையணி. இது தலைப்பாகையைக் குறிப்பதென்பர். சென்னி-தலை. உரு - அழகு. புகல் - சொல்லுகிற. மரு - வாசனை. வண்ணம் - அழகு, நிறம். வையத்து - பூமியில். நட்பு - சிநேகம். (16)

### பகைக்கப்படாதவ ரிவரெனல்

அரசர்பகையுந் தவம்புரி தபோதனர்பகையு
மரிய கருணீகர்பகையு
மடுத்துக் கெடுப்போர் கொடும்பகையு முட்பகையு
மருளிலாக் கொலைஞர் பகையும்
விரகுமிகு மூரிலுள்ளோருடன் பகையு மிகு
விகடப்ரசங்கி பகையும்
வெகுசனப் பகையு மந்திரவாதியின்பகையும்
விழை மருத்துவர்கள் பகையும்
உரமருவு கவிவாணர் பகையு மாசான்பகையு
முறவின்முறையார்கள் பகையு
முற்ற திரவியமுளோர் பகையு மந்திரிபகையு
மொருசிறிது மாகாது காண்
வரநதியின் மதலையென வினிய சரவணமிசையில்
வரு தருண சிறு குழவியே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

'அரசர்பகை ஆகாது'—'அரசன் அன்று கொல்லும்' என்பது பழமொழி. தபோதனர் - செல்வத்தைப்போலத் தவத்தைப் பாது காப்பவராகிய முனிவர்கள். அரிய கருணீகர் - தப்புதற்குஅருமை யான கொடுமையைச் செய்யக்கூடியவர்களாகிய கணக்கர்கள். உள் பகை - தனக்கு அந்தரங்கராயிருந்துகொண்டே பகைவர்க்கு இடங் கொடுக்கிற பங்காளிகள்முதலிய உள்ளாயிருக்கும் பகைவர். விரகு- வல்லமை, தந்திரம், திறமை, அறிவு. "ஊருடன் பகைக்கின் வேரு டன் கெடும்" ஆதலால், ஊராரோடு பகைகொள்ளலாகாது. மிகு விகடம் ப்ரசங்கி - மிகவும் விநோதமாகப் பேசும் விகடக்காரன். விழை மருத்துவர் - விரும்பத்தக்க வைத்தியர். உரம் மருவு கவி வாணர் - வலிமைபொருந்திய கவிஞர். கவி வாணர் - கவிபாடி வாழ்பவர். இனி, கவிகளாகிய பாணங்களைத் தொடுப்பவரென்பாரு முளர். ஆசான் - ஆசாரியன். உற்ற - மிக்க. வர நதி - சிறந்த கங்கையாறு. மதலை - மகன். சரவணம் மிசையில் - சரவணப் பொய்கையினிடத்தில். வரு - அவதரித்த. தருண சிறு குழவியே - என்றும்மாறுத இளமைப்பருவத்தையுடைய சிறிய குழந்தையான வனே! (17)

அவ்வவ்வினத்தி லுயர்ந்தவை

தாருவிற் சந்தான நதியினிற் கங்கை விர
    தத்தினிற் சோம வாரந்
தகைபெறு நிலத்தினிற் காச்மீர கண்டந்
    தலத்திற் சிதம்பர தலம்
சீருலவு ருஷிகளில் வசிட்டர் பசுவிற் காம
    தேனு முனிவரி னாரதன்
செல்வநவமணிகளிற் றிகழ் பதுமராகமணி
    தேமலரி லம்போருகம்
பேருலவு கற்பினி லருந்ததி கதித்திடு
    பெலத்தின் மாருதம் யானையிற்
பேசி லைராவதந் தமிழினி லகத்தியம்
    பிரணவம் மந்திரத்தில்

வாரிதியிலே திருப்பாற்கடல் குவட்டினின்
மகாமேரு வாகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

தாரு - தருவென்பதன் நீட்டல்; விருட்சம். சந்தானமென்பது - கற்பகவிருக்ஷம். சந்தனமென்பதும் பாடம். சோமவாரம் என்பது - சோமவாரவிரதத்தைக் குறிக்கும். சோமவாரம் - திங்கட்கிழமை. தகை பெறு நிலத்தினில் - பெருமைபெற்ற பூமியில். சீர் உலவு - சிறப்புப்பொருந்திய. காமதேனு வென்பது - வசிட்டமாமுனிவருடையது. நவ மணிகள் - ஒன்பதுவகை இரத்தினங்கள்; அவை - கோமேதகம், நீலம், பவழம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. திகழ் - விளங்குகின்ற. தேன் மலரில் - தேன்பொருந்திய புஷ்பங்களில். அம்போருகம் - தாமரைமலர். பேர் உலவு கற்பினில் - பிரசித்திபொருந்திய பதிவிரதாதருமமுடைய மகளிரில். அருந்ததியென்பவள், வசிட்டரது மனைவி. கதித்திடு - சிறந்த, மிக்க. மாருதம் - காற்று, வாயுதேவன். ஐராவதமென்பது - கீழ்த்திசையானை; இந்திரனுக்கு உரியது. தமிழினில் - தமிழிலக்கணநூல்களில். அகத்தியம் என்பது - அகத்திய முனிவரியற்றிய தமிழிலக்கணநூல். வாரிதி - கடல். குவட்டினில் - மலைகளில். (18)

### அவரவர்க்குப் பலமாவன

அந்தணர்க் குயர்வேதமே பலங் கொற்றவர்க்
கரிய சௌரியமே பல
மானவணிகர்க்கு நிதியே பலஞ் சூத்திரர்க்
காயி னேருழவே பலம்
மந்திரிக்குச் சதுருபாயமே பல நீதி
மானுக்கு நடுவே பலம்
மாதவர்க்குத் தவசு பல மடவியர்க்கு நிறை
மானமிகு கற்பே பலம்

தந்திர மிகுத்த கனசேவகர்தமக்கெலாஞ்
சாமிகாரியமே பலஞ்
சான்றவர்க்குப் பொறுமையே பலம் புலவோர்
தமக்கு நிறை கல்வி பலமாம்
வந்தனைசெயும் பூசைசெய்பவர்க் கன்பு பலம்
வாலவடிவான வேலா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

அந்தணர் - பிராமணர். கொற்றவர் - அரசர்; ஜயமுடையவ ரென்பது காரணப்பொருள். நிதி - ஐசுவரியம். ஆயின் - ஆராயின்; இதற்கு ஆனல் என்றும் பொருள்கொள்ளலாம். சதுருபாயம் - நால் வகை யுபாயங்கள்; அவை - சாம தான பேத தண்டம் என்பன. நடு - நடுநிலைமை; பக்ஷபாதமின்மை. மா தவர் - சிறந்த இருடிகள். மடவியர் - மகளிர். கற்பு - பதிவிரதாதருமம். சான்றவர் - பெரி யோர். புலவோர் - வித்துவான்கள். வந்தனை - வணக்கம். அன்பு - பக்தி. வால வடிவு ஆன - சிறுகுழந்தை யுருவமுடைய. (19)

## உபகார மில்லாதவை

கடனீர் மிகுந்தென்ன வொதிதான் பருத்தென்ன
காட்டிலவு மலரிலென்ன
கருவேல் பழுத்தென்ன நாய்ப்பால் சுரந்தென்ன
கானின் மழை பெய்து மென்ன
அடர்கழுதை லத்தி நிலமெல்லாங் குவிந்தென்ன
வரிய குண மில்லாத பெண்
ணழகா யிருந்தென்ன வாஸ்தானகோழை பல
வரியநூ லோதி லென்ன

திடமினிய பூதம் வெகுபொன் காத்திருந்தென்ன
திறன்மிகுங் கரடி மயிர்தான்
செறிவாகி நீண்டென்ன வஸ்தரபூஷணமெலாஞ்
சித்திரத் துற்று மென்ன
மடமிகுந் தெவருக்கு முபகார மில்லாத
வம்பர்வாழ்வுக்கு நிகராம்
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

ஒதி - ஒதியமரம். காட்டிலவு - முள்முருக்கு என்பர். கானில் - காட்டில. ஆஸ்தானகோழை - சபையிற் பேச அஞ்சி நடுங்குபவன். திடம் இனிய - வலிமையிற் சிறந்த. திறல் - வலிமை. செறிவு - அடர்த்தி. உற்றும் - பொருந்தியும். மடம் - அறியாமை. வம்பர் - வீணர். நிகர் - ஒப்பு. (20)

### சேத்துஞ் சாகாதவர்

அனைவர்க்கு முபகாரமாம் வாவி கூவ முண்
டாக்கினோர் நீதி மன்ன
ரழியாத தேவாலயங் கட்டிவைத்துளோ
ரகரங்கள் செய்த பெரியோர்
தனையொப்பிலாப் புதல்வனைப் பெற்றபேர் பொருது
சமர்வென்ற சுத்த வீரர்
தரணிதனி னிலைநிற்க வெந்நாளு மாறாத
தருமங்கள் செய்தபேர்கள்
கனவித்தை கொண்டவர்க ளோயாத கொடையாளர்
காவியஞ் செய்த கவிஞர்
கற்பினின் மிகுத்த வொருபத்தினி மடந்தையைக்
கடிமணஞ் செய்தோர்க ளிம

மனிதர்கள் சரீரங்கள் போகினுஞ் சாகாத
மனிதரிவ ராரு மன்றோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

அனைவர்க்கும் - எல்லோர்க்கும். வாவி - குளம். கூவம் - கூபம்; கிணறு. அகரங்கள் - அக்கிரஹாரங்கள்; பிராமணர் குடியிருக்கத் தக்க வீதிகளும் ஊர்களும். பொருது - யுத்தஞ்செய்து. சமர் - யுத்தம். சுத்த வீரா - போரிற் புறங்காட்டாதவர். தரணி - பூமி. கன வித்தை - மேன்மைபொருந்திய மிக்க கல்வி. மடந்தை - மாது. கடி மணம் - விவாஹம்; கடியென்பது, சிறப்பு முதலிய பலபொருள் களைக் குறிக்கும். (21)

### சிறிதும் பயன்படாதவர்

பதராகிலுங் கனவிபூதி விளைவிக்கும்
பழமைபெறு சுவராகிலும்
பலருக்கு மறைவாரு மாடுரிஞ்சிடு மலம்
பன்றிகட் குபயோகமாம்
கதமிகு கடாவென்னி லுழுது புவிகாக்கும் வன்
கழுதையும் பொதிசுமக்குங்
கல்லெனிற் றேவர்களு மாலயமுமாம் பெருங்
கான்புற்று மரவ மனையாம்
இதமிலாச் சவமாகிலுஞ் சிலர்க் குதவிசெயு
மிழிவுறு குரங்காயினு
மிரக்கப் பிடித்தவர்க் குதவிசெயும் வாருகோ
லேற்றமாளிகை விளக்கும்
மதமதுமிகும் பரமலோபரா லுபகார
மற்றொருவருக்கு முண்டோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

மாடு உரிஞ்சிடும் - மாடுகள் முதலியன தினவைத் தீர்த்துக் கொள்ளும்; குட்டிச் சுவர்கள் மாடுரிஞ்சிடவும் உதவுமென்க. பன்றி கட்கு உபயோகமாம் - பன்றிகளுக்கு உணவாய்ப் பயன்படும். கதம் - கோபம். புவி - பூமி. வன் கழுதை - வலிய கழுதை. கான் - காடு. அரவம் மனையாம் - பாம்புக்கு வீடாம். இதம் - நன்மை, இன்பம். சவம் - பிணம். இரக்க - பிச்சையெடுக்க. வாருகோல் - விளக்குமாறு துடைப்பம். பரமலோபர் - மிகுந்த லோபகுணமுடையவர்; லோபமென்பது - ஈயாத்தன்மை. (22)

திருவாழிடங்கள்

கடவாரணத்திலுங் கங்கா சலத்திலுங்
கமலாசனந்தன்னிலுங்
காகுத்தன் மார்பிலுங் கொற்றவரிடத்திலுங்
காலியின் கூட்டத்திலும்
நடமாடு பரியிலும் பொய்வார்த்தை சொல்லாத
நல்லோரிடந்தன்னிலும்
நல்ல சுபலக்ஷண மிகுந்த மனைதன்னிலும்
ரண சுத்தவீரர்பாலும்
அடர்கேதனத்திலுஞ் சுயம்வரந்தன்னிலு
மருந்துளசி வில்வத்திலு
மலர்தரு கடப்பமலர்தனிலு மிரதத்திலு
மதிகுணமான ரூப
மடவாரிடத்திலுங் குடிகொண்டு திருமாது
மாறு திருப்ப ளென்றே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கட வாரணம் - மதயானை. கமலாசனம் - தாமரைமலராகிய பீடம். காகுத்தன் - திருமாலின் திருவவதாரமான இராமன்; இது, இங்குத் திருமாலைக் குறிக்கும். காலியின் கூட்டம் - பசுமந்தை.

நடம் ஆடு - நர்த்தனஞ்செய்கின்ற. 'பயிரிலும்' என்றும் பாடம்; அப்போது, 'நடமாடு' என்பது - செழிப்பான என்னும் கருத்தைக் குறிக்கும். ரணம் - போர். வீரர்பாலும் - வீரரிடத்திலும். அடர் - நெருங்கிய. கேதனம் - துவசம்; வெற்றிக்கொடி. சுயம்வரம் - பெண் கணவனைத் தானே வரித்துக்கொள்ளும் கலியாணம்; இது, இங்குப் பொதுவாக விவாஹத்தைக் குறிக்கும். அலர்தரு - மலர்ந்த. மடவார் - மகளிர். திரு மாது - இலக்குமி. (23)

## குறிப் பறிதல்

மனதிற் கடும்பகை முகத்திலு லறியலா
மாநிலப் பூடுக ளெலாம்
மழையினு லறியலா நல்லார்பொலார்தமை
மக்களா லறியலாகும்
கனமருவு சூரரைச் சமரினு லறியலாங்
கற்ற வொரு வித்துவானைக்
கல்வி ப்ரசங்கத்தினு லறியலாங் குணங்
களை நடையினு லறியலாம்
தனதக மடுத்தது பளிங்கினு லறியலாஞ்
சாதி சொல்லா லறியலாந்
தருநீதி கேள்வியா லறியலாம் பிணிகளைத்
தாதுக்களா லறியலாம்
வனச விகசித வதன பரிபூரணனந்த
வாலவடிவான வேலா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கடும் பகை - கொடிய விரோதம். 'மனதிற் கடும்பகை முகத்தினு லறியலாம்'—"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்," "அகத்தினழகு முகத்தில் தெரியும்" என்பன காண்க. பூடுகள் மாநிலமெலாம் என மாற்றுக; பூண்டுகள்

மூளைக்கின்ற பெரிய நிலத்தின் தன்மை முழுவதையும். 'மாநிலப் பூகெளெலாம் மழையினு லறியலாம்'—''நிலத்தியல்பு வான முறைத் துவிடும்'' என்பது காண்க. 'நல்லார் பொலார்தமை மக்களாலறியலாகும்'—'' மகனுரைக்கும் தந்தைநலத்தை '', '' செந்நெலாலாய செழுமுளை மற்று மச்செந்நெலே யாகி விளைதலால் ........ மகனறிவு தந்தையறிவு,'' '' பழியின்மை மக்களாற் காண்க,'' ''தந்தையரொப்பர் மக்கள்'' என்பன காண்க. கனம் மருவு - பெருமை பொருந்திய. சமர் - யுத்தம். பளிங்கு - கண்ணாடி. தனது அகம் அடுத்தது - அதனிடத்து [கண்ணாடியினிடத்து] ச்சார்ந்த பொருளின்தன்மையை. தரு நீதி கேள்வியால் அறியலாம் - (சாஸ்திரங்களினல்) உபதேசிக்கப்பட்ட நீதிகளைப் (பெரியோரிடம் தாம்) கேட்டலினல் அறிந்துகொள்ளலாம். பிணிகள் - வியாதிகள். தாதுக்கள் - நாடிகள். வனச விகசித வதன - தாமரைமலர்போல மலர்ச்சிபொருந்திய திருமுகமுடையவனே! பரிபூரண ஆனந்த - நிறைந்த ஆனந்தவடிவ மானவனே! இது, தனது அடியார்க்கு ஆனந்தத்தைத் தருபவன் என்றபொருளையுங் கொடுக்கும். வால வடிவு ஆன - இளம்பிள்ளைவடிவான. வேலா - வேற்படையையுடையவனே! (24)

குண மாறுமை

குணமிலாத் துஷ்டமிருகங்களையு நயகுணங்
கொண்டிட்டபடுத்திவிடலாங்
கொடிய பலவிடநோய்க ளியாவு மௌஷதமது
கொடுத்துத் திருப்பிவிடலாம்
உணர்விலாப் பிரமராட்சசமுதற் பேய்களை
யுகந்து கூத்தாட்டிவிடலா
முபாயத்தினுற் பெரும்பறவைக்கு நற்புத்தி
யுண்டாக்கலா முயிர் பெறப்
பிணமதை யெழுப்பலா மக்கினி சுடாமற்
பெரும்புனலெனச் செய்யலாம்
பிணியையு மகற்றலாங் காலதூதுவரையும்
பின்பு வருகென்று சொலலாம்

மணலையுங் கயிறுத் திரிக்கலாங் கயவர்குண
மட்டுந் திருப்ப வசமோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

நய குணம் - இனிய குணம், நற்குணம். உட்படுத்தி - வசப் படுத்தி. உகந்து - விரும்பி, மகிழ்ந்து. புனல் - ஜலம். பிணி - வியாதி. அகற்றலாம் - நீக்கலாம். கால தூதுவர் - யமதூதர். வருக+என்று=வருகென்று. கயவர் - கீழ்மக்கள். (25)

இத்தீக்குணத்தோ ரிவ்விலங்குபோல்வ ரெனல்

தான்பிடித்தது பிடிப்பென்று மேலவர்புத்தி
தள்ளிச்செய்வோர் குரங்கு
சபையிற் குறிப்பறியமாட்டாம னின்றவர்
தாம் பயனிலாத மரமாம்
வீம்பினு லெளியவரை யெதிர்பண்ணி நிற்குமொரு
வெறியர் குரைஞமலி யாவார்
மிகநாடி வருவோர் முகம்பார்த்திடா லோபர்
மேன்மையில்லாத கழுதை
சோம்பலொடு பெரியோர்சபைக்குட் படுத்திடுந்
தூங்கலே சண்டிக் கடா
சூதுட னடுத்தோர்க் கிடுக்கணே செய்திடு
துட்டனே கொட்டு தேளாம்
மாம்பழந்தனை வேண்டி யந்நாளி லீசனை
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

தான்பிடித்தது பிடிப்பு - தான்பிடித்ததே பிடி. மேலவர் - பெரியோர். 'சபையிற் குறிப்பறியமாட்டாம் னின்றவர்தாம் பய னிலாத மரமாம்'—"சுவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கு, மவையல்ல நல்லமரங்கள்—சவைநடுவே, .......... குறிப்பறிய மாட்டாதவ னன்மரம்" என்னுஞ் செய்யுளையுங் காண்க. வீம்பு - இறுமாப்பு. குரை ஞமலி - குரைக்கும் நாய். நாடி - தேடி, விரும்பி. தூங்கல் - தூங்குமூஞ்சி. சண்டிக்கடா - முரட்டுக்கடா. சூதுடன் இடுக்கணே செய்திடும் என இயையும். இடுக்கண் - துன்பம். வல மாக - பிரதக்ஷிணமாக. 'மாம்பழந்தனைவேண்டி யக்நாளிலீசனை வல மாக வந்த முருகா'—கதை கேட்டறிக. (26)

அற்பர் வாழ்வால் குணம் வேறுபடுதல்

அற்பர்க்கு வாழ்வு சற்றதிகமானால் விழிக்
கியாவருருவுந் தோன்றிடா
தண்டிநின்றே நல்லவார்த்தைகளுரைத்தாலு
மவர்செவிக் கேறிடாது
முற்பக்ஷமானபேர் வருகினும் வாருமென
மொழியவும் வாய் வராது
மோதியே வாதப் பிடிப்பு வந்ததுபோல
முன்காலை யகல வைப்பார்
விற்பன மிகுத்த பெரியோர் செய்திசொன்னாலும்
வெடுவெடுத் தேசி நிற்பார்
விருதா மகத்துவப் பேயது சவுக்கடி
விழும்போது தீரு மென்பார்
மற்புயந்தனி னீபமாலையணி லோலனே
மார்பனே வடிவேலவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

முன் பக்ஷமான என்று பிரித்துக்கொள்க. வாதம் பிடிப்பு - வாயுவினாலாகிய பிடிப்பு. விற்பனம் - கல்வியறிவு. வெடுவெடுத்து - கடுகடுத்து. ஏசி - இகழ்ந்து, தூஷித்து, வைது. விருதா மகத்துவம் பேய் அது - வீண்பெருமை பாராட்டலாகிய பேயானது. மல்புயந்தனில் - மற்போர்புரியத்தக்க வலிமையுள்ள தோள்களில். நீபம் மாலை அணி - கடப்பமலர்மாலையைத் தரித்துள்ள. லோலன் - காதலுடையவன்; இங்கு அடியார்களிடத்தில் அன்புடையவன் என்ற பொருளைக் கொள்க. மார்பனே - மார்பழகுடையவனே! (27)

## நல்வினைஞ்சேர் பயன்

சந்தன விருக்ஷத்தை யண்டிநிற்கின்ற பல
 தருவு மவ்வாசனை தருந்
 தங்கமகமேருவை யடுத்திடுங் காக்கையுஞ்
 சாயல் பொன்மயமே தரும்
பந்தமிகு பானுடன் விளாவிய தணீரெலாம்
 பால்போ னிறங் கொடுக்கும்
 படிகமணிகட்குளே நிற்கின்ற வடமு மப்
 படியே குணங்கொடுக்கும்
அந்தமிகு மாகதக் கல்லைத் தரித்திடி
 லடுத்ததும் பசுமையாகு
 மான பெரியோர்களொடு சகவாசமது செய்யி
 லவர்கள் குணம் வருமென்பர் காண்
மந்தர நெடுங்கிரியின் முன் கடல்கடைந்தவரி
 மருக மெய்ஞ்ஞான முருகா
 மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
 மலைமேவு குமரேசனே.

தருவும் - மரங்களும். சாயல் பொன்மயமே - பொன்மயமான ஒளியையே. பந்தம் மிகு - கலக்குந்தன்மை மிக்க. அந்தம் - அழகு.

நெடு மந்தரம் கிரியின் - உயர்ந்த மந்தரமென்னும் மலையைக் கொண்டு. அரி மருக - திருமாலினது மருமகனே! (28)

## பெரியோர்வாக்ய பரிபாலனஞ் செய்தோர்

தந்தைதாய் வாக்ய பரிபாலனஞ் செய்தவன்
தசரத குமார ராமன்
றமையனருள் வாக்ய பரிபாலனஞ் செய்தோர்கள்
தருமனுக் கிளைய நால்வர்
சிந்தையி லுணர்ந்து குருவாக்ய பரிபாலனஞ்
செய்தவ னரிச்சந்திரன்
றேகியென்றோர்க் கில்லையெனு வாக்ய பாலனஞ்
செய்தவன் றான கன்னன்
நிந்தைதவிர் வாக்ய பரிபாலனஞ் செய்தவ
னீள்பல மிகுத்த வநுமா
னிறையுடன் பர்த்தாவின் வாக்ய பரிபாலனை
நிலைத்தினி னளாயினி செய்தாள்
மந்தைவழிகோயில்குளமூங் குலவு தும்பிமுகன்
மகிழ்தர வுகந்த துணைவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

தேகி - கொடு. இலை எனு வாக்ய பாலனம் செய்தவன் - இல்லையென்று சொல்லாமையாகிய மொழியை (த்தன்னிடத்தில் நீங்காதபடி) பாதுகாத்தவன். நிந்தை தவிர் வாக்ய பரிபாலனம் செய்தவன் - பழிப்பில்லாத (பெரியோர்) சொல்லை நன்கு பாதுகாத்தவன். நளாயினி - நாளாயனி. நிறை - மனத்தைக் கற்புநெறியில் நிறுத்துதல்; கற்புநிலைமை. குலவு - விளங்குகின்ற; எழுந்தருளியிருக்கிற. தும்பி முகன் - யானைமுகக்கடவுளாகிய விநாயகன். மகிழ்தர - மகிழ்ச்சியடைய. உகந்த - (அவனுடன்) விரும்பி விளையாடுகிற. துணைவா - (அவனது) தம்பியே! (29)

## முயற்சியின் மிக்க தூழெனல்

வங்காள மேறினும் வாருகோ லொருகாசு
மட்டன்றி யதிக மாமோ
வானேறி யுயரப் பறந்தாலு மூர்க்குருவி
வண்ணப் பருந்தாகுமோ
கங்கா சலந்தன்னின் மூழ்கினும் பேய்ச்சுரைக்
காய் நல்லசுரை யாகுமோ
கடலுக்கு ளுழியை யமுக்கியே மொண்டிடிற்
காணுமோ நாலுழி தான்
ஐங்காத மோடினுந் தன்வினைக டன்னுடே
யடையாம னீங்கிவிடுமோ
வாரிடஞ்சென்றாலும் வெகுதொலைகள்சுற்றினு
மமைத்தபடி யன்றி வருமோ
மங்காத செந்தமிழ் கொண்டு நக்கீரர்க்கு
வந்ததுயர் தீர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

வங்காளம் ஏறினும் - வங்காளநாட்டிற்குச் சென்றாலும், வாருகோல் - விளக்குமாறு, துடைப்பம். வண்ணம் - அழகு, நிறம், வடிவு. வெகு தொலைகள் - வெகுதூரங்கள். அமைத்தபடி அன்றி வருமோ - (அவரவர்க்குக் கடவுளால்) அமைக்கப்பட்ட முறைப்படியன்றி வேறுவிதமாக உண்டாகுமோ? [உண்டாகாது.] மங்காத - அழியாத (சிறப்புடைய.) செந்தமிழ் - செந்தமிழ்ப்பாடல்; திருமுருகாற்றுப்படை முதலியன. கொண்டு - ஏற்றுக்கொண்டு. நக்கீரர்க்கு வந்த துயர் - மரணத்துன்பம். (30)

### இடும்பா லழிவு

சூரபத்மன் பலமு மிராவணன் றீரமுந்
துடுக்கான கஞ்சன் வலியுந்
துடியான விரணியன் வரப்ரசாதங்களுந்
தொலையாத வாலி திடமும்
பாரமிகு துரியோதனாதி நூற்றுவரது
பராக்கிரமமு மது கைடவர்
பாரிப்பு மாபலிதனாண்மையுஞ் சோமுகன்
பாங்கிலுறு வல்லமைகளும்
ஏரணவு கீசகன் கனதையுந் திரிபுர
ரெண்ணமுந் தக்க னெழிலு
மிவர்களது சம்பத்து நின்றவோ வவரவ
ரிடும்பா லழிந்த வன்றோ
மாரனைக் கண்ணா லெரித்தருள் சிவன்றந்த
வரபுத்ர வடிவேலவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

தீரம் - தைரியம். துடுக்கு ஆன - தீக்குணமுள்ள. துடி ஆன - மேன்மைகொண்ட, பதைபதைப்புடைய. ப்ரசாதங்கள் - அநுக்கிரகங்கள். திடமும் - வலிமையும். பாரம் மிகு - (பூமிக்குப்) பாரமாக மிகுந்த. துரியோதன ஆதி நூற்றுவர் - துரியோதனன் முதலிய நூறுபேர். மது கைட.வர் - மது கைடபன் என்னும் இரண்டு அசுரர். பாரிப்பு - பெருமை. மாபலி - மகாபலிசக்ரவர்த்தி. ஆண்மை - பௌருஷம். சோமுகன் பாங்கில் உறு - சோமுகாசுரனிடத்திற் பொருந்திய. ஏர் அணவு - அழகும் வளர்ச்சியும் பொருந்திய. கனதை - பெருந்தன்மை. திரிபுரர் - திரிபுரத்து அசுரர். எழிலும் - செருக்கும். இடும்பால் - தீச்செயல்களால். மாரன் - மன்மதன். வர புத்ர - சிறந்த குமாரனே. (31)

## நட்புநிலை

மாமதியின் முயலான ததுதேய்வுழித் தேய்ந்து
  வளருமப்போது வளரும்
வாவிதனி லாம்பல்கொட்டிக ளதனினீர்வற்றின்
  வற்றிடும் பெருகி லுயரும்
பூமருவு புதல்பூடு கோடையிற் றீய்ந்திடும்
  பொங்குகாலந் தழைக்கும்
புண்டரிக மிரவிபோ மளவிற் குவிந்திடும்
  போதுதயமாகின் மலரும்
தேமுடலிளைக்கி லுயிர்கூடவு மிளைக்கு மது
  தேறி லுயிருஞ் சிறக்குஞ்
சேர்ந்தோர்க் கிடுக்கணது வந்தாலு நல்லோர்
  சிநேக மப்படியாகுமே
வாமனசொரூப மதயானைமுகனுக் கிளைய
  வால குருபர வேலவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
  மலைமேவு குமரேசனே.

மா மதி - பெரிய சிறந்த சந்திரன். முயலானது - முயல்வடிவம்போலத் தெரிகின்ற களங்கம். தேய்வுழி - குறையும்போது. வாவிதனில் - குளத்தில். பெருகில் - (அக்குளத்தில் நீர்) மிகுந்தால். பூ மருவு புதல் பூடு - நிலத்திற்பொருந்திய புற்களும் பூண்டுகளும். பொங்கு காலம் - (அந்நிலம் மழைவளத்தாற்) செழிக்கும்போது. புண்டரிகம் - தாமரை. இரவி போம் அளவில் - சூரியன் அஸ்தமிக்கும்பொழுது. தேம் உடல் இளைக்கில் - (உயிர்க்கு) இடமான உடல் இளைத்தால். சிறக்கும் - சிறந்தவலிமைபெறும். இடுக்கணது - துன்பம். ‘நல்லோர்சிநேகம் அப்படிஆகுமே’ - நல்லோர்தம்மால் அடுக்கப்பட்டவர்கள் இன்பமடையத் தாமும் இன்பமடைந்து, அவர்கள் துன்பமடையத் தாமும் துன்பமடைவர் என்பதாம். “அக்

குளத்திற், கொட்டியு மாம்பலு நெய்தலும்போலவே, ஒட்டி யுலர்வா ருறவு" என்றார் ஔவையாரும். வாமன சொரூபம் - குட்டையான வடிவத்தையுடைய. குரு பர - சிறந்த குருவே! (32)

கைப்பலனுமவை

பருவத்திலே பெற்ற சேயும் புரட்டாசி
பாதி சம்பா நடுகையும்
பலமினிய வாடிதனி லானைவால்போலவே
பயிர்கொண்டு வரு கரும்பும்
கருணையொடு மிக்கநாணயமுளோர் கையினிற்
கடனிட்டு வைத்த முதலுங்
காலமது நேரிற் றனக்குறுதியாக முன்
கற்றுணர்ந்திடு கல்வியும்
விருதரசரைக்கண்டு பழகிய சிநேகமும்
விவேகிகட் குபகார மாம்
வீணல்ல விவையெலாம் கைப்பலனதாக வபி
விருத்தியாய் வருமென்பர் காண்
மருவுலாவிய நீபமாலையுந் தண்டரள
மாலையும் புனை மார்பனே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

பருவத்திலே - தக்க பிராயத்தில். சேய் - புத்திரன். பலம் இனிய - பலந்தருதலிற் சிறந்த. கருணை - தயை. காலமது நேரில் - காலம்வாய்த்தால்; காலம் வாய்த்தபோது என்க. உறுதி ஆக - நன்மையைத் தருவதாக. விருது - குடை கொடி பட்டப்பெயர்கள் முதலியன. மரு உலாவிய நீபம் மாலை - மணம்பொருந்திய கடப்ப மலர்மாலை. தண் தரளம் - குளிர்ந்த முத்து. புனை - அணிந்துள்ள. (33)

## திரும்பமாட்டாதவை

ஆடரவின் வாயினி லகப்பட்ட தவளையு
 மானைவாயிற் கரும்பும்
மரிதான கப்பலிற் பாய்மரக் காற்றினி
 லகப்பட்டமெலி காக்கையும்
நாடறியவே தாரைவார்த்துக் கொடுத்தது
 நமன்கைக்குளான வுயிரும்
நலமாகவே யணைகடந்திட்ட வெள்ளமு
 நாய்வேட்டைபட்ட முயலும்
தேடியுண்பார் கைக்குளான பலவுடைமையுந்
 தீவாதையான மனையுந்
திரள் கொடுங்கோலரசர் கைக்கேறு பொருளுந்
 திரும்பிவாரா வென்பர் காண்
மாடமிசை யன்னக்கொடித்திரள்கொள் சோணாடு
 வாழவந்திடு முதல்வனே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
 மலைமேவு குமரேசனே.

ஆடு அரவின் வாயினில் - படமெடுத்து ஆடுகின்ற பாம்பின் வாயில். 'ஆலைவாயிற் கரும்பும்' என்பதும் ஓர் பாடம்; ஆலை- கரும்பு ஆலை. மெலி - வருந்துகின்ற. நமன்-யமன். நலம் ஆக - நன்றாக. தேடி உண்பார்-கள்வர் முதலியோர். தீவாதை ஆன மனை - நெருப்பின் கொடுமைக்கு இரையான வீடு. திரள் - மிகுதி. மாடம் மிசை - உபரிகையின்மீது. அன்னம் கொடிதிரள் கொள் சோணாடு - யாசகர்க்கு அன்னமிடு மிடமென்று அடையாளமாகக் கட்டிய கொடிகளின்கூட்டத்தைக் கொண்டசோழநாடு: "மேதக்க சோழவளநாடு சோறுடைத்து" என்றார் ஒளவையாரும். சோணாடு வாழ - சோழநாட்டிலுள்ளார் உஜ்ஜீவிக்க. (34)

### இதனினுமிது நன்றெனல்

கடுகடுத் தாயிரஞ் செய்குவதி லின்சொலாற்
களிகொண் டழைத்த னன்று
கனவேள்வி யாயிரஞ் செய்வதிற் பொய்யுரை
கருத்தொடு சொலாமை நன்று
வெடுவெடுக்கின்ற தோரவிவேகி யுறவினில்
விவேகியொடு பகைமை நன்று
வெகுமதிக ளாயிரஞ் செய்வதி னரைக்காசு
வேளைகண் டுதவ னன்று
சடுதியிற் பக்குவஞ் சொல்லுங் கொடைக்கிங்கு
சற்றுமிலை யென்ன லன்று
சம்பத்துடன் பிணியின் மெலிகுவதி லேயற்ற
தாரித்திரிய நன்றுகாண்
மடுவினிற் கரி யோலமென்ன வந்தருள்செய்த
மான் மருகனான முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கடுகடுத்து - வெறுப்புக்கொண்டு. ஆயிரம் - அநேகம் நன்மைகள். களி - ஸந்தோஷம். கனம் வேள்வி - பெரிய சிறந்த யாகம். கருத்தொடு - மனம் அறிய. வெடுவெடுக்கின்றது - கடுமையாயிருக்கின்ற, கோபித்துப்பேசுகின்ற. வேளை கண்டு உதவல் - சமயம் பார்த்துக்.கொடுத்தல். சடுதியில் = சடிதியில். பக்குவம் - தவணை; இது, இங்கு, தந்திரமான சமாதானஞ்சொல்லுதலையுங் குறிக்கலாம். கரி - கஜேந்திரனென்னும் யானை. ஒலம் என்ன - முறையிட. மால் - மகாவிஷ்ணு. மருகன் - மருமகன். (35)

பலகூடினு மொன்றற் கீடாகாதவை

தாரகைக ளொருகோடி வானத் திருக்கினுஞ்
சந்திரற் கீடாகுமோ
தாருவிற் கொடிதொனிகள் பலகூடினுமொரு
தம்பட்ட வோசை யாமோ
கோரமிகு பன்றியின் குட்டிபல கூடினொரு
குஞ்சரக்கன் றாகுமோ
கொட்டிமலர் வாவியிற் பலகூடினுமொரு
கோகனதமல ராகுமோ
பாரமிகு மாமலைகள்பல கூடினுமொரு
பைம்பொன் மகமேரு வாமோ
பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்தும் விற்
பனனொருவனுக்கு நிகரோ
வாரணக்கொடி யொருகரத்திற்பிடித் தொன்றில்
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

தாரகைகள் - நக்ஷத்திரங்கள். ஈடு - ஒப்பு. தாரு - மரம்; தரு என்பது நீண்டது. கொடி - காக்கை; கொடிகளுமாம். கோரம் - கொடிய விகாரவடிவம். குஞ்சரம் - யானை. கோகனதம் - தாமரை. பைம்பொன் - பசுமை பொன். விற்பனன் - கல்வியறிவுடையவன். வாரணம் - கோழி. கரம் - கை. ஒன்றில் - மற்றொருகையில்.(36)

தீச்சார்பாற் பயன்படாதவை

மடுவினிற் கஞ்சமலருண் டொருவ ரணுகாமல்
வன்முதலை யங்கிருக்கும்
மூலையினிற் றேனுண்டு சென்றொருவர் கிட்டாமன்
மருவியதில் வண்டிருக்கும்

நெடுமைதிகழ் தாமைமலருண் டொருவ ரணுகாம
ணீங்காதமுள் ளிருக்கும்
நீடு பல சந்தனவிருக்ஷமுண் டணுகாது
நீளரவு சூழ்ந்திருக்கும்
குடிமல்கி வாழ்கின்ற வீட்டினிற் செல்லாது
குரைநாய்க ளங்கிருக்குங்
கொடுக்குந் தியாகியுண் டிடையூறு பேசுங்
கொடும்பாவி யுண்டு கண்டாய்
வடுவையுங் கடுவையும் பொருவு மிருகண்ணி குற
வள்ளிக் குகந்த கணவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

தீச்சார்பு - கெட்டசேர்க்கை. கஞ்சம் மலர் - தாமரைப்பூ. வல்+முதலை=வன்முதலை. வல் - கொடிய. மருவி - பொருந்தி. வண்டு - தேனீ. நெடுமை திகழ் - நீட்சியாக விளங்குகின்ற. நீடு - நீண்ட. நீள் அரவு - நீண்ட ஸர்ப்பம். குடி மல்கி - குடும்பம்பெருகி. தியாகி - வரையாது கொடுப்பவன். இடையூறு - தடை. வடு - மாவடுப்பிளப்பின் உள்வடிவு. கடு - விஷம். கண்கள் காமமூட்டி மரணவேதனையைத் தருதலால், அவற்றிற்கு விஷம் உவமையாகக் கூறப்படும். பொருவும் - ஒத்த. உகந்த - விருப்பத்திற்கு இடமான.

## கலிகாலக் கொடுமை

தாய் புத்திசொன்னன் மறுத்திடுங்கால முயர்
தந்தையைச் சீறு காலஞ்
சற்குருவை நிந்தைசெய்கால மெய்க்கடவுளைச்
சற்று மெண்ணுத காலம்

பேய் தெய்வமென் றுபசரித்திடுங் காலம்
புரட்டருக் கேற்ற காலம்
பெண்டாட்டி வையினுங் கேட்கின்ற கால நற்
பெரியர்சொல் கொளாத காலம்
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு கால மிகு
சிறியவன் பெருகு காலஞ்
செருவில்விட் டோடினோர் வரிசைபெறு காலம்
செப்புவோர்க் குதவு காலம் [வசை
வாய்மதம் பேசிவிடு மநியாயகாரர்க்கு
வாய்த்த கலிகால மையா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

சீறு - கோபிக்கின்ற. சத் குரு - சிறந்த ஆசிரியன். புரட்டர்- பேச்சுத்தவறுபவர், வாக்குநாணயமில்லாதவர். தேய்வுடன் - மெலிவோடு. பெருகு - மேன்மை மிகுதியாகப் பெறுகிற. செரு - யுத்தம். வரிசை - பரிசு, வெகுமானம். வசை - நிந்தை, பழிமொழி. வாய்த்த - ஏற்ற. (38)

### அவரவர்க்குரியவை

கல்வியொடு கனமுறச் சபையின் மேல்வட்டமாக்
காண வைப்போன் பிதாவாங்
கற்றுணர்ந்தே தனதுபுகழாற் பிதாவை ப்ர
காசஞ்செய்வோன் புத்திரன்
செல்வமிகு கணவனே தெய்வமென் றனுதினஞ்
சிந்தைசெய்பவண் மனைவியாஞ்
சினேகிதன்போலவே யன்புவைத் துண்மை
செப்புமவனே சோதரன் [மொழி

தொல்வளமிருந்தநூற் கரைதெரிந் துறுதிமொழி
சொல்லுமவனே குரவனுஞ்
சொன்னநெறி தவறுமல் வழிபாடு செய்துவரு
துய்யனே யினிய சீடன்
வல்விரக மிஞ்சு சுரகுஞ்சரியுடன் குறவர்
வஞ்சியை மணந்த கணவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கனம் - கௌரவம். மேல்வட்டம் - மேலான [முதன்மையான] நிலைமை, மகத்துவம். "தந்தை மகற்காற்றும் நன்றி யவையத்து முந்தி யிருப்பச் செயல்," "மகன் தந்தைக் காற்றும் நன்றி யிவன் றந்தை, என்னோற்றான்கொல் என்னுஞ் சொல்" என்பன இங்குக் காண்க. செல்வம் மிகு கணவன் - செல்வக்கணவன். இது, செல்வப்பிள்ளை என்பது போன்றது: மிக்க செல்வம்போன்ற [அருமை பெருமை பொருந்திய] கணவன் என்க. அநுதினம் - நாடோறும். சிந்தை செய்பவள் - நினைப்பவள். செப்புமவன் - சொல்பவன். சோதரன் - சகோதரன். தொல் - பழைய. வளம் - சொல்வளம், பொருள்வளம். உறுதிமொழி - நன்மையை விளக்கும் சொல். குரவன் - ஆசாரியன். நெறி - வழி, முறை. வழிபாடு - தொண்டு. துய்யன் - பரிசுத்தன். இனிய - சிறந்த. சீடன் - சிஷ்யன். வல் விரகம் - கொடிய ஆசைநோய். மிஞ்சு - மிக்க. சுர குஞ்சரி - தெய்வ யானை. வஞ்சி - வஞ்சிக்கொடிபோல் மெல்லியவள்: வள்ளி. (39)

### சிறுமையிற் பெருமை

சேற்றிற் பிறந்திடுங் கமலமலர் கடவுளது
திருமுடியின்மே லிருக்குந்
திகழ்சிப்பி யுடலிற் சனித்தமுத் தரசரது
தேகத்தின்மே லிருக்கும்

போற்றியிடு பூச்சியின் வாயினால் பட்டென்று
பூசைக்கு நேசமாகும்
புகலரிய வண்டெச்சிலான தேன் றேவர்கொள்
புனித வபிடேக மாகும்
சாற்றிய புலாலொடு பிறந்த கோரோசனை
சவாதுபுழு கனைவர்க்கு மாஞ்
சாதியீனத்திற் பிறக்கினுங் கற்றோர்கள்
சபையின் மேல்வட்ட மன்றோ
மாற்றிச் சுரத்தினை விபூதியா லுடல்குளிர
வைத்த மெய்ஞ்ஞான முதலே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

திருமுடி - சிறந்த சிரம். திகழ் - விளங்குகின்ற. சனித்த - பிறந்த. போற்றியிடு - பாதுகாத்திடுகிற. நேசம் - விரும்பப்படுவது. புகல் அரிய - சொல்லுதற்கு அரிய [இழிவுள்ள.] புனிதம். - பரிசுத்தம். அபிஷேகம் - அபிஷேகத் திரவியம். சாற்றிய - (இழிவாகச்) சொல்லப்பட்ட. அனைவர்க்கும் - எல்லோர்க்கும். சாதி ஈனத்தில் - ஈனசாதியில். சுரத்தினை மாற்றியென மாற்றுக. முருகக்கடவுள் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாராயவதரித்தபோது, பாண்டியனது மற்றெதனாலுந் தீராச் சுரத்தை விபூதியினால் நீக்கி அவனது உடல் குளிரச்செய்தன ரென்பது, வரலாறு. மெய்ஞ்ஞானம் - தத்துவ ஞானம். (40)

செயத் தகாதவை

தானுசரித்துவரு தெய்வமிது வென்று பொய்ச்
சத்தியஞ் செயில் விடாது
தன்வீட்டி லேற்றிய விளக்கென்று முத்தந்
தனைக்கொடுத்தா லது சுடும்

ஆனாலு மேலவர்கண் மெத்தவுந் தனதென்
றடாதது செயிற் கெடுதியா
மானதான் மெத்தப் பழக்கமானாலுஞ் செய்
யாது செய்தாற் கொன்றிடும்
தீனான தினிதென்று மீதூண் விரும்பினாற்
றேகபீடைகளே தருஞ்
செகராசர் சனுவென்ன வேலாத காரியஞ்
செய்தான் மனம்பொறார்காண்
வானாடு புகழு மொருசோணாடு தழைய விவண்
வந்தவதரித்த முதலே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

ஆசரித்து - வழிபட்டு, பூசித்து. மேலவர்கண் ஆனாலும் என்க. மேலவர்கண் - மேலோரிடத்து. மெத்தவும் - மிகவும். தனது என்று - தனக்கு வேண்டியவரே யென்று. அடாது - தகாதது. தீன் ஆனது - உணவானது: தின் என்பது தீன்என முதல் நீண்டது. "மீதூண் விரும்பேல்" என்றார் ஔவையாரும். செகராசர் - பூமியையாளும் அரசர். சனு - உதவியாயுள்ளவர், நண்பர். வான் நாடு - சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்கள். ஒரு சோணாடு தழைய - ஒப்பற்ற சோழநாடு செழிப்பும் சிறப்பும் அடையும்படி. இவண் - இவ்விடத்தில். (41)

## நடுவு நிலைமை

வந்தவிவகாரத்தி லினிய பரிதானங்கள்
வருமென்று நேச ரென்றும்
வன்பகைஞரென்று மயலோரென்று மிக்க கன
வானென்று மேழை யென்றும்

இந்தவகையைக்குறித் தொருபக்ஷபாத மோ
 டுள்ளள வுரைத்திடாம
லெண்ணமுடனே லிகிதபுத்தியொடு சாக்ஷிக்கு
 மேற்கச் சபாசமதமா
முந்த விருதலையுஞ் சமன்செய்த கோல்போன்
 மொழிந்திடற் றர்மமதுகாண்
முனைவீம னுடல்பாதி மிருகந்தனக்கென் று
 முன் றருமர் சொன்னதலைவா
மைந்தனென்ன வன் றுமை முலைப்பால் கொடுத்திட
 வளர்ந்தருள் குழந்தை வடிவே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
 மலைமேவு குமரேசனே.

விவகாரம் - வ்யவஹாரம்; வழக்கு. இனிய பரிதானங்கள் - விரும்பத்தக்க லஞ்சப்பொருள்கள். நேசர் - நண்பர். வல்பகைஞர் - கொடிய பகைவர். எண்ணமுடனே - வாதிப்பிரதிவாதிகளுடைய மனத்தின் நினைப்புக்கும். லிகித புத்தியொடு - எழுத்துமூலமான ஆதாரங்களால் அறியப்படுகிற விஷயத்துக்கும். சாக்ஷிக்கும் - சாக்ஷிகள் சொன்ன வாக்குமூலத்திற்கும். சபா சமதம் ஆ - நியாயசபையில் உள்ளவரெல்லோர்க்கும் சம்மதமாயிருக்கும்படி. முந்த இருதலையும் சமன் செய்த கோல்போல் - முன்னே ( தான் ஒருபக்கத்திலும் சாயாமல் ) சமமாய் நடுநின்ற துலாக்கோல் ( பின்பு தன்னிடம் வைக்கப்பட்ட பாரத்தை உள்ளபடி உணர்த்துதல் ) போல. மொழிந்திடின் - சமமாய்நின்று தீர்ப்புக்கூறினால். முனை வீமன் - வலிமையையுடைய வீமசேனன். கதை கேட்டறிக. "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற், கோடாமை சான்றோர்க் கணி " என்பது, திருக்குறள். (42)

### பக்ஷபாதம்

ஓரவிவகாரமா வந்தவர்முகம்பார்த்
துரைப்போர் மலைக்குரங்கா
முயர்வெள்ளெருக் குடன் முளைத்துவிடு மவரில்லம்
முறையுமூர் பாழ்நத்த மாம்
தாரணியி லிவர்கள்கிளை நெல்லியிலைபோ லுகுஞ்
சமானமா வெழுபிறப்புஞ்
சந்ததியிலா துழல்வ ரவர்முகத்தினின் மூத்த
தையலே குடியிருப்பாள்
பாரமிவரென்று புவிமங்கையு நடுங்குவாள்
பழித்த துர்மரண மாவார்
பகர்முடிவிலே ரவுரவாதி நரகத் தனு
பவிப்ப ரெப்போது மென்பார்
வாரமுட னருணகிரிநாதருக் கனுபூதி
வைத்தெழுதி யருள் குருபரா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

ஓரம் விவகாரம் - பக்ஷபாதமான வழக்குத்தீர்ப்பு. இல்லம் - வீடு. உறையும் - வசிக்கும். தாரணி - தரணி; பூமி. கிளை - உறவினர். உகும் - உதிர்ந்துவிடும்; அழிந்துவிடும். உழல்வர் - அலைவார்கள். மூத்த தையல் - மூதேவி. புவி மங்கை - பூமிதேவி. பகர் முடிவிலே - சொல்லப்படும் அந்திய காலத்தில்; உயிர் உடலை விட்டு நீங்கியபின்னர்; மறுமையில். ரவுரவம்=ரௌரவம்: இது ஓர் நரக விசேஷம். வாரமுடன் - அன்புடன். அருணகிரிநாதர் என்பவர் திருப்புகழ்முதலிய நூல்களை யியற்றியருளிய ஓர் மகான். அநுபூதி - கந்தரநுபூதி யென்னும் நூல் என்பர். "வேதாளஞ் சேருமேவெள்ளெருக்குப் பூக்குமே, பாதாளமூலி படருமே-மூதேவி,

சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே, மன்றோரஞ் சொன்ஞேர் மனை" என்னுஞ் செய்யுட்கருத்து இச்செய்யுளில் வந்துள்ளமை காண்க. (43)

அளவு படாதவை

வாரியாழத்தையும் புனலெறியு மலைகளையு
மானிடர்கள் சனனத்தையும்
மன்னவர்க ளினைவையும் புருஷர்யோகங்களையும்
வானினுயர் நீளத்தையும்
பாரிலெழு மணலையும் பலபிராணிகளையும்
படியாண்ட மன்னவரையும்
பருப்பதத்தின் னிறையு மீசுரச் செயலையும்
பனிமாரிபொழி துளியையும்
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையுஞ்
சித்தர்தம துள்ளத்தையுந்
தெரிவையர்கள் சிந்தையையு மிவ்வள வெனும்படி
தெரிந்தளவிடக் கூடுமோ
வாரிச மடந்தை குடிகொண்ட நெடுமாலுக்கு
மருகனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

வாரி - வாரிதி; கடல். புனல் எறியும் - அருவிநீர் சொரிகின்ற. சனனம் - பிறப்பு. பாரில் - பூமியில். படி - பூமி. பருப்பதம் - பர்வதம். மாரி - மழை. சீரிய - சிறந்த. சித்தர் - சித்திபெற்ற பெரியோர்கள். தெரிவையர்கள் - மகளிர். வாரிசம் மடந்தை - செந்தாமரைமலரில் வாழ்கிற இலக்குமி. நெடு மால் - மஹாவிஷ்ணு. (44)

### மானம் விடாமை

கனபார மேறிற் பிளந்திறுவ தன்றியே
  கற்றூண் வளைந்திடாது
கருதலர்க ளாலுடைந் தாலுமுயி ரளவிலே
  கனசூர னமரின் முறியான்
தினமோ ரிடுக்கண்வந் துற்றாலும் வேங்கைதோல்
  சீவனள விற்கொடாது
திரமான பெரியோர் சரீரங்கள் போகினுஞ்
  செப்புமுறை தவறிடார்கள்
வனமேறு கவரிமா னுயிர்போகு மளவுந்தன்
  மயிரினொன் றுங்கொடாது
வாராத வாபத்து வருகினுங் கற்புடைய
  மாதுநிறை தவறி நடவாள்
மனதார வுனதடைக் கலமென்ற கீரற்கு
  வன்சிறை தவிர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
  மலைமேவு குமரேசனே.

கனம் பாரம் ஏறின் - அதிகபாரம் ஏற்றப்பட்டால். இறுவது - ஒடிவது. கல் + தூண் = கற்றூண். கருதலர்கள் - பகைவர்கள். உடைந்தாலும் - அழிவுநேர்ந்தாலும், கஷ்டப்பட்டாலும். உயிர் அளவிலே - பிராணன் உள்ளவரையில். கன சூரன் - மிக்க சூரத் தன்மையுள்ளவன். அமரில் - போரில். முறியான் - தோற்றோடான். இடுக்கண் - துன்பம். வந்து உற்றாலும் - வந்து நேர்ந்தாலும். சீவன் அளவில் - உயிர் உள்ள வரையில். திரம் ஆன பெரியோர் - (ஒழுக்கத்தில்) உறுதியுள்ள மேலோர். செப்பும் - சொல்லும். வனம் ஏறு - அழகுமிக்க. கவரி மான் - சமரீமிருகம்: கவரியென்னும் மான். நிறை - கற்புநிலைமை. மனது ஆர - மனப்பூர்வமாக, மனப்பூர்த்தியாக. அடைக்கலம் - சரணம். கீரற்கு - நக்கீரனுக்கு. வன் சிறை -

கொடிய சிறையிலிருப்புத் துன்பம். "உற்றவிடத்தி லுயிர்வழங்கும் தன்மையோர், பற்றலரைக் கண்டால் பணிவரோ - கற்றூண், பிளந்திறுவதல்லால் பெரும்பாரந் தாங்கின், தளர்ந்து வளையுமோ தான்", "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர் நீப்பர் மானம் வரின்" என்பன இங்குக் காண்க. (45)

## திருவருட் சிறப்பு

திருமகள்கடாக்ஷ முண்டானவெவர்க்குஞ்
சிறப்புண்டு கனதை யுண்டு
சென்றவழியெல்லாம் பெரும்பாதையாய்விடுஞ்
செல்லாத வார்த்தை செல்லும்
பொருளொருதுரும்பு மரியாதையாஞ் செல்வமோ
புகல் பெருக்காறு போலாம்
புவியின் முன் கண்டுமதியாதபேர் பழகினவர்
போலவே நேச மாவார்
பெருமையொடு சாதியி லுயர்ச்சிதரு மனுதினம்
பேரும் ப்ரதிஷ்டையு முறும்
பிரியமொடு பகையாளிகூட வுறவாகுவான்
பேச்சினிற் பிழை வராது
வருமென நினைத்தபொருள் கைகூடிவரு மதிக
வல்லமைகண் மிகவு முண்டாம்
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

திருமகள் கடாக்ஷம் - இலக்குமியின் அருட்கடைக்கண் ணோக்கம். கனதை - கௌரவம். பாதை - வழி. புகல் பெருக்கு ஆறு போலாம் ; சிறப்பித்துச் சொல்லப்படும் ஆற்றுப்பெருக்குப்போல் மேன்மேல் பெருகும். (46)

நட்பு நிலை

கதிரவ னுதிப்பதெங்கே நளினமெங்கே
களித்துள மலர்ந்த தென்ன
கார்மேக மெங்கே பசுந்தோகை யெங்கே
களித்தி னட்பான தென்ன
மதியமெங்கே பெருங்குமுதமெங்கே முக
மலர்ந்து மகிழ்கொண்ட தென்ன
வல்லிரவு விடிவதெங்கே கோழி யெங்கே
மகிழ்ந்து கூவிடுத லென்ன
நிதியரச ரெங்கேயிருந்தாலு மவர்களோடு
நேச மொன்றாயிருக்கும்
நீதிமிகு நல்லோர்க ளெங்கிருந்தாலு மவர்
நிறைபக்ஷ மறவார்கள்காண்
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவு போரூ ரதிபனே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கதிரவன் - சூரியன். நளினம் - தாமரை மலர். உளம் களித்து - மனம் மகிழ்ந்து. கார் மேகம் - கருநிறமுள்ள மேகம். பசுந்தோகை - பசுமைநிறமுள்ள மயில். மதியம் - சந்திரன். பெருங்குமுதம் - சிறந்த ஆம்பல். மகிழ் - மகிழ்ச்சி. வல் இரவு - பயங்கரமான இராப் பொழுது. நிதி - செல்வக்குவியல். வானத்தில் நெடுந்தூரத்தி லுள்ள பொருள்களுக்கும் பூமியி லுள்ள பொருள்களுக்கும் ஒன்றுக்கு ஒன்று சிநேககுணம் மிகுதல்போலவே, உலகத்தில் எவ்வளவு தூரத்திலுள்ளார்க்கும் சிநேகம்மிகுதல் இயல்பு என்பதாம். இரவு விடிவது எங்கும் உள்ளதாயினும் அதற்குக் காரணமான சூரியனது தோற்றம் வானத்திலுள்ளதுபற்றி, அதனை நெடுந்தூரத்ததுபோலக் கூறினர். வாவி - தடாகம். புடை சூழ - பக்கங்களிலெல்லாஞ் சூழ்ந்திருக்க. மருவு - பொருந்திய. அதிபன் - தலைவன். (47)

## கால மறிதல்

காகம் பகற்காலம் வென்றிடுங் கூகையைக்
கனகமுடி யரசர்நாளுங்
கருது சயகால மதுகண் டந்தவேளையிற்
காரிய முடித்துவிடுவார்
மேகமுங் கார்கால மதுகண்டு பயிர்விளைய
மேன்மேலு மாரி பொழியும்
மிக்கான வறிவுளோர் வருதருணகாலத்தின்
மிடியாளருக் குதவுவார்
நாகரிகமுறு குயில் வசந்தகாலத்திலே
நலமென் றுகந்து கூவு
நல்லோர் குறித்ததைப் பதறும லந்தந்த
நாளையின் முடிப்பர் கண்டாய்
வாகனையகாலை கன மாலை புல் லெனு முகை
வாடிக்கை நிசமல்லவோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கூகை - கோட்டான். கனகம் - பொன். முடி - கிரீடம். கருது சய காலம் - வெற்றிகிடைக்குமென நினைத்த சமயம். "பகல் வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும், வேந்தர்க்கு வேண்டும் பொழுது" என்னுந்திருக்குறளை இங்கே காண்க. கார்காலம் - மழைக் காலம். மாரி - மழை. மிக்கு ஆன - மிகுதியான. தருணகாலத்தில் - தக்ககாலத்தில், துன்பமுற்ற காலத்தில். மிடியாளர் - தரித்திரர். உறு - பொருந்திய. வசந்தகாலம் என்பது - சித்திரையும் வைகாசியு மாகிய இளவேனிற்பருவம். நலம் - நன்மை. உகந்து - விரும்பி. வாகு அனைய காலை கல் - அழகிய அத்தகைய[சிறப்புப்பொருந்திய] இளமைப்பருவம் அறஞ்செய்தற்கு உறுதியானது. மாலை புல் - முதுமைப்பருவம் அற்பமானது. " காலைச் செய்வோமென் றறத்

தைக் கடைப்பிடித்துச், சாலச் செய்வாரே தலைப்படுவார்—மாலை, கிடந்தா னெழுத லரிதால் மற்றென்கொல், அறங் காலை செய்யாத வாறு" என்னுஞ் செய்யுளில், காலை மாலை என்னுஞ் சொற்கள் இளமை முதுமை யென்னும் பொருளையே தந்துநின்றமை காண்க. உலக வாடிக்கை - உலகத்துப் பழமொழி. (48)

## இடனறிதல்

தரையதனி லோடுதேர் நீள்கடலி லோடுமோ
சலதிமிசை யோடு கப்பல்
தரைமீதி லோடுமோ தண்ணீரி லுறு முதலை
தன்முனே கரி நிற்குமோ
விரைமலர்முடிப் பரமர் வேணியரவினை வெல்ல
மிகுகருடனா லாகுமோ
வேங்கைக ளிருக்கின்ற காடுதனி லஞ்சாமல்
வேறொருவர் செல்ல வசமோ
துரைகளைப் பெரியோரை யண்டிவாழ்வோர் தமைத்
துஷ்டர்பகை யென்னசெய்யுந்
துணைகண்டு 'சேரிட மறிந்துசேர்' ரென்றௌவை
சொன்னகதை பொய்யல்லவே
வரையூது மாயனை யடுத்தலாற் பஞ்சவர்கள்
வன்போர் சயித்த தன்றே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

நீள் கடல் - பெரிய சமுத்திரம். சலதிமிசை - கடலின்மீது. கரி - யானை. விரை மலர் முடி பரமர் - வாசனையுள்ள மலர்மாலையைச் சூடிய திருமுடியையுடைய சிவபிரான். வேணி - சடை. மிகு கருடன் - (பக்ஷிகட்குச்) சிறந்த அரசனாகிய கருடன். "மெலியோர் வலிய விரவலரை யஞ்சார், வலியோர்தமைத் தாமருவில்—

பலியேல், கடவு ளவிர்சடைமேற் கட்செவி யஞ்சாதே, படர்சிறை யப்புள்ளரசைப் பார்த்து " என்பது, நன்னெறி. வேங்கைகள் - வேங்கைப்புலிகள். வரை - மூங்கில்; இது,இங்குப் புள்ளாங்குழலைக் குறிக்கும். மாயன் - ஆச்சரியகரமான குணஞ்செயல்களை யுடைய திருமாலின் திருவவதாரமாகிய கண்ணபிரான். பஞ்சவர்கள் - பாண்டவரைவர். வல் போர் - கொடிய யுத்தம். (49)

வேட்டகத் திகழ்ச்சி

வேட்டகந்தன்னிலே மருகன் வந்திடுமளவின்
மேன்மேலு முபசரித்து
விருந்துகள்சமைத்து நெய்பாறயிர் பதார்த்தவகை
வேண்டுவ வெலா மமைப்பார்
ஊட்டமிகு வர்க்கவகை செய்திடுவர் தைலமிட்
டுறுதியாய் முழுகுவிப்பா
ரோயாது தின்னவே பாக்கிலை கொடுத்திடுவ
ருற்றநா ளொருகிலோ
நாட்ட மொருபடி யிறங்குவதுபோன் மரியாதை
நாளுக்குநாள் குறைவுறும்
நகைசெய்வர் மைத்துனர்க ளுலவல்பார் போ
நாணுமன் மாமி சொல்வாள் [வென்று
வாட்டமனையா ளொருதுரும்பாய் மதிப்ப ளவன்
மட்டியிலு மட்டி யன்றோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

மருகன் - மருமகன். பால் + தயிர் = பாறயிர். ஊட்டம் மிகு - உண்பித்தற்கு உரிய சிறந்த. உறுதியாய் - நன்றாக. இலை - வெற்றிலை. உற்ற - பொருந்திய. நாட்டம் - விருப்பம். நகை செய்வர் - பரிகாசஞ்செய்வர். நாணுமல் - வெட்கமில்லாமல். வாட்டம் மனையாள் - மெலிவுங் குறைவுமுடைய மனைவியும். (50)

செல்வ நிலையாமை

ஓடமிடு மிடமது மணற்சுடுஞ் சுடுமிடமு
மோடமிகவே நடக்கு
முற்றதோ ராற்றின்மடு மேடாகு மேடெலா
முறுபுனல்கொண் மடுவாயிடும்
நாடு காடாகு முயர்காடு நாடாகிவிடு
நவில்சகடு மேல்கீழதாம்
நடையூறு சந்தைபல கூடு முடனேகலையு
நன்னிலவு மிருளாய் விடும்
நீடுபகல் போயபின் பிரவாகு மிரவுபோய்
நிறைபகற்போதாய்விடும்
நிதியோர் மிடித்திடுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்
மாடு மனைபாரிசன மக்க ணிதி பூஷணமு
மருவுகன வாகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

உற்றது - பொருந்திய. உறு புனல் - மிக்க நீர். நவில் சகடு - சொல்லப்படும் வண்டிச்சக்கரம். நடை ஊறு - (மனிதர்) நடையாடு கின்ற. நல் நிலவு - நல்ல நிலாக்காலம். நீடு பகல் - சிறந்த பகற் காலம். நிறை பகல் -(ஒளி)நிறைந்த பகல். மிடித்திடுவர் - தரித்திரப் படுவர். மிடியோர் - தரித்திரர். செழித்திடுவர் - செல்வமுடையவ ராவர். பாரி - பார்யை. சனம் - உறவினர். மக்கணிதி - மக்கள் நிதி. மருவு - பொருந்திய. (51)

பிறந்தார் பெறுபேறு

சடமொன் றெடுத்தாற் புவிக்கு நல்லவனென்று
தன்பேர் விளங்கவேண்டுஞ்
சதிருட னிதல்லாது மெய்ஞ்ஞானியென் றவ
தரிக்கவே வேண்டு மல்லால்

திடமினிய ரணசூரவீ ரனிவ னென்னவே
திசைமெச்சவேண்டு மல்லால்
தேகியென வருபவர்க் கில்லையென் றுமலே
செய்யவேவேண்டு மல்லால்
அடைவுடன் பலகல்வி யாராய்ந்து வித்துவா
னாகவேவேண்டு மல்லா
லறிவான துரைமக்களாக வரவேண்டுமிவ
ரதிகபூபால ரையா
வடகுவடு கிடுகிடென வெழுகடலு மலையெறிய
மணியுரகன் முடிக ணெரிய
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

சடம் - உடல். புவிக்கு - பூமிக்கு. சதிர் - திறம். திடம் இனிய - வலிமையிற் சிறந்த. ரண சூர வீரன் - போர்புரியத்தக்க சௌரியமும் வீரமு முள்ளவன். திசை - திசையிலுள்ளார். தேகி- கொடு. செய்யவே வேண்டும்-(பொருள் கொடுத்து தவுதலைச்) செய்ய வேண்டும். அடைவுடன் - முறைப்படி. இவர் - இப்படிப்பட்டவர். அதிக பூபாலர் - சிறந்த அரசர், அரசரினுஞ் சிறந்தவர். வடகுவடு - வடதிசையிலுள்ள மேருமலை. அலை எறிய - அலை வீச. மணி உரகன் முடிகள் - மாணிக்கமுள்ள ஆதிசேடனென்னும் சர்ப்பராசனது சிரங்கள். ஆதிசேடன் பூமியைக் கீழிருந்து தாங்குகின்றானென்பது, பழையநூற் கொள்கை. (52)

### வறுமையிற் சிறுமை

வறுமைதான் வந்திடிற் றாய் பழுதுசொல்லுவாண்
மனையாட்டி சற்று மெண்ணாள்
வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வநது விளையும்

சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது
சிந்தையிற் றைரிய மிலை
செய்யசபைதன்னிலே சென்றுவர வெட்கமாஞ்
செல்வரைக் காணிநாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரி
னுயிருடன் செத்த பிணமா
முலகம் பழித்திடும் பெருமையோர்முன்புசென்
றொருவரொடு செய்தி சொன்னான்
மறுவசனமுஞ் சொலார் துன்பினிற் றுன்பமிது
வந்தணுகிடா தருளுவாய்
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

வறுமை - தரித்திரம். பழுது - குற்றம். மனையாட்டி - மனைவி. சிறுமை - எளிமை. சிந்தையில் - மனத்தில். செய்ய சபைதன்னிலே - நல்ல சபையிலே. நாணும் - நாணமடைவான். குன்றிடும் - குறைந்துபோம். உயிருடன் செத்த பிணமாம் - உயிரோடிருக்கையிலேயே உயிர்நீங்கின உடம்புபோலச் செயலழிந்து நிற்பான். உலகம் - உலகத்திலுள்ள சனங்கள். மறு வசனம் - பதிலுத்தரம். துன்பினில் துன்பம் இது வந்து அணுகிடாது - துன்பங்கள் எல்லாவற்றினும் மிக்கதுன்பத்தைத் தருவதான இத்தரித்திரம் (யார்க்கும்) வந்து சேராதபடி. அருளுவாய் - கருணைசெய்வாய். "கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின், எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை, இல்லாளும் வேண்டாள் மற்றீன்றெடுத்த தாய் வேண்டாள், செல்லா தவன்வாயிற் சொல்" என்றார் ஔவையாரும். (53)

தீச்சார்பா னன்மையிழப்பு

ஆனை தண்ணீரி னிழல்பார்த்திடத் தவளைசென்
றங்கே கலக்கி யுலவு
மாயிரம்பேர்கூடி வீடுகட்டிடி லேத
மறைகுறளு முடனே வரும்
ஏனை நற்பெரியோர்கள் போசனஞ்செயுமளவி
லீக்கிடந் திசை கேடதாம்
இன்பமிகு பசுவிலே கன்றுசென் றூட்டுதற்
கினியகோ னதுதடுக்கும்
சேனைமன்னவ ரென்னகரும நியமிக்கினுஞ்
சிறியோர்களாற் குறைபடும்
சிங்கத்தையும் பெரிய விடபத்தையும் பகைமை
செய்த தொருநரியல்லவோ
மானையுந் திகழ்தெய்வயானையுந் தழுவு மணி
மார்பனே யருளாளனே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

பார்த்திட அதற்கு இடையூறாக எனக் கூட்டிக் கொள்க. "சிறிய பகையெனினும் ஓம்புதல் தேற்றார், பெரிதும் பிழைபா டுடையர்—நிறைகயத், தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும், யானை நிழல்காண் பரிது" என்னும் நீதிநெறிவிளக்கச்செய்யுள் இங்குக் காணத்தக்கது. உலவும் - உலாவும். ஏதம் அறை குறள் - பழித் துச்சொல்லப்படுகின்ற மோதுந் தன்மையுள்ள பேய். 'ஏகம்' என்று பாடமாயின், அதற்கு - ஒன்று என்பது பொருள். இனி, 'ஏதம் அறை குறள்' என்பதற்கு - (அவ்வீட்டிற்குக்) குற்றஞ் சொல்லுகிற குறளன் என்று பொருள்கூறுவாருமுளர்; குறளன் - குள்ளன், கோட்சொல்பவன். ஏனை - மற்றும். ஈ கிடந்து இசை கேடதாம் - (போசனத்தில்) ஈ விழுந்து பழிப்புக்கிடமாம். இனிய

யோன் - (பசுக்காத்தலிற்) சிறந்த (பசுவிற்குத்) தலைவனாகிய இடையன். கருமம் - காரியம். நியமிக்கினும் - கட்டளையிட்டாலும். இடபம் - எருது. நரி சிங்கத்திற்கும் இடபத்திற்கும் பகைமூட்டிய வரலாறு பஞ்சதந்திரத்தில் மித்திரபேதத்திற் காண்க. மானையும் - மானின் மகளாகிய வள்ளியையும்; அன்றி, மான்கண்போலும் கண்ணை யுடைய வள்ளியையும் எனினுமாம். அணி மார்பன் - அழகிய மார்புடையவன். அருளாளன் - கருணையையுடையவன். (54)

### இடையூறுற்றும் பயன்படுபவை

ஆறு தண்ணீர்வற்றிவிட்டாலு மூற்றுநீ
ரமுதபானங் கொடுக்கு
மாதவனை யொருபாதி கட்செவி மறைத்தாலு
மப்போது முதவி செய்வன்
கூறுமதி தேய்பிறையதாகவே குறையினுங்
குவலயத் திருள் சிதைக்குங்
கொல்லைதான் சாவிபோய்விட்டாலு மங்குவரு
குருவிக்கு மேய்ச்ச லுண்டு
வீறுடனுதாரிதான் மிடியான போதினிலு
மிகநாடி வருபவர்க்கு
வேறுவகை யில்லையென் . . ரையா தியன்றது
வியந் துளமகிழ்ந் துதவுவான்
மாறுபடு சூர சங்கார கம்பீரனே
வடிவேலணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

அமுத பானம் - அமுதம்போல் இனிய பானம்; பானம் - குடிக்கத்தக்கது. ஆதவன் - சூரியன். கட்செவி - பாம்பு; இது, இங்கு, இராகுகேதுக்களைக் குறிக்கும். கூறும் மதி - (சிறப்பித்துச்) சொல்லப்படும் சந்திரன். குவலயத்து - பூமியின். சிதைக்கும் -

அழிக்கும், நீக்கும். வீறுடன் உதாரி - மிக்க சிறப்புடன் கூடிய ஈகைத்தன்மையுடையோன். மிடி - தரித்திரம். நாடி - தேடி, விரும்பி. இயன்றது - (தன்னால்) கூடியது. வியந்து - கொண்டாடி. உளம் - உள்ளம்; மனம். மாறுபடு - பகைமைகொண்ட. சூர சங்கார - சூரபத்மனைச் சங்கரித்தவனே! "ஆற்றுப் பெருக்கற் றடிசுடு மந்நாளு மவ்வா று, ஊற்றுப்பெருக்கா லுலகூட்டும் - ஏற்ற வர்க்கு, நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும், இல்லையென மாட்டா ரிசைந்து", "ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை அங்கண்மாஞாலம் விளக்குறூஉந் திங்கள்போல், செல்லாமை செவ்வ னேர்நிற்பினு மொப்புரவிற்கு, ஒல்கார் குடிப்பிறந்தார்" என்னுஞ் செய்யுள்களின் கருத்து இங்கு உள்ளமை காண்க. (55)

## நற்புலவர் தீப்புலவர் செயல்

மிக்கான சோலையிற் குயில்சென்று மாங்கனி
விருப்பமொடு தேடி நாடும்
மிடை கருங்காகங்க ளக்கனி யிருந்தாலும்
வேப்பங்கனிக்கு நாடும்
எக்காலும் வரிவண்டு பங்கேருகத்தினி
லிருக்கின்ற தேனை நாடி
மெத்தனை சுகந்தவகை யுற்றுலு முருள்வண்
டினந் துர்மலத்தை நாடும்
தக்கோர் பொருட்சுவைநயங்க ளெங்கேயென்று
தாம் பார்த் துகந்து கொள்வார்
தாழ்வான வன்கண்ணர் குற்றமெங்கே யென்று
தமிழி லாராய்வர் கண்டாய்
மைக்காவிவிழிமாது தெய்வானையுங் குறவர்
வள்ளியுந் தழுவு தலைவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

மிக்கு ஆன - (செழிப்பு) மிகுதியாய்ப்பொருந்திய. நாடும் - ஆராயும். மிடை - ( கூட்டமாய் ) நெருங்கியிருக்குந்தன்மையுள்ள. எக்காலும் - எப்போதும். வரி வண்டு - இசைபாடும் வண்டு; இனி, வரி - கோடுகளுமாம். பங்கேருகம் - தாமரைமலர். நாடும் - தேடி விரும்பியடையும். சுகந்தம் - நல்ல வாசனை. உற்றாலும் - பொருந்தியிருந்தாலும். தக்கோர் - மேலோர். பொருள் சுவை நயங்கள் - பொருளில் உள்ள சுவையும் நயமும். வன்கண்ணர் - கொடியவர். மை காவி விழி மாது - மைதீட்டப்பெற்றவையும் கருங்குவளைமலர் போன்றவையுமாகிய கண்களையுடைய பெண். குறவர் வள்ளி - குறவர் குடியில் வளர்ந்த வள்ளி. "உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங் கீழ், கொண்டுபுகல்வ தவர்குற்றமே—வண்டு மலர்ச், சேக்கை விரும்புஞ் செழும் பொழிலவாய் வேம்பன்றே, காக்கை யுகக்குங் கனி" என்பது, நன்னெறி. (56)

## தாழ்தற் பெருமை

வேங்கைகள் பதுங்குதலு மாமுகி லொதுங்குதலும்
விரிசிலை குனிந்திடுதலும்
மேடம தகன்றிடலும் யானைக ளொடுங்குதலும்
வெள்விடைக டுள்ளி விழலும்
மூங்கில்கள் வணங்குதலு மேலவ ரிணங்குதலு
முனிவர்க ளயர்ந்து கொளலும்
முதிர்படை யொதுங்குதலும் வினைஞர்க ளடங்கு
முதலினர் பயந்திடுதலும் [தலு
ஆங்கரவு சாய்குதலு மகிழ்மல ருலர்ந்திடலு
மாயர்குழல் சூடுபடலு
மம்புவியி லிவை காரியங்களுக்கல்லாம
லதனை லிளைப்பு வருமோ

மாங்கனிக்கா வரனை வலமதுபுரிந்து வளர்
மதகரிக் கிளைய முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

மா முகில் - பெரிய சிறந்த மேகங்கள். ஒதுங்குதல் - விலகிச் செல்லுதல். விரி சிலை - பெரிய விற்கள். மேடம்அது அகன்றிடலும் - ஆடுகள் விலகிப் பின்னே செல்லுதலும். ஒடுங்குதல் - அடங்கியிருத்தல். வெள் விடைகள் - வெண்மையான எருதுகள். மேலவர் இணங்குதலும் - ( வல்லமையினுற் ) பெரியோர் அதிற் சிறியாரோடு சந்தியாதற்கு இசைதலும். முனிவர்கள் நயந்து கொளலும் - (கோபங்கொண்டு சபிக்கத்திறமுள்ள) முனிவர்கள் (அங்ஙனஞ் செய்யாது) அன்புகொண்டு நடத்தலும். முதிர்படை- வலிமைமிக்க சேனைகள். வினைஞர்கள் - தொழில்திறமுள்ளவர்கள், காரியக்காரர்கள். முதலினர் பயந்திடுதலும் - தலைமைபெற்ற அதிகாரிகள் (தமக்குக் கீழ்ப்பட்டவர்க்கு) அஞ்சுதலும். ஆம் கரவு சாய்குதலும் - பெரிய முதலைகள் தலைசாய்ந்திருத்தலும். ஆங்கு அரவு எனப்பிரித்து, ஆங்கு என்பதை அசையெனக்கொண்டு, அரவு சாய்குதல் என்பதற்கு - பாம்பு தலைசாய்தல் என்றும் பொருள்கொள்ளலாம்; பாம்பு தலைசாய்தல் - பின்பு படமெடுத்துக் கடித்தற்கு. மகிழ் மலர் - மகிழம்பூ. ஆயர் குழல் சூடுபடலும் - இடையர் வாயில்வைத்து ஊதும் வேய்ங்குழல் அனற்சூடுகொள்ளுதலும். அம் புவியில் - அழகிய பூமியில். அதனுல் - இங்ஙனம் மெலிதலால். இளைப்பு - குறை. புலி பதுங்குதல் - உடனே பாய்தற்கு. முகில் ஒதுங்குதல் - மழைபெய்தற்கு. வில் வளைதல் - அம்பு எய்தற்கு. ஆடு போரில் பிற்காலித்தல் - உடனே பாய்ந்து மோதுதற்கு. யானை ஒடுங்குதல் - சமயமறிந்து கொல்லுதற்கு. எருது துள்ளிவிழுதல் - பின்பு எழுந்து ஊக்கங்கொண்டு தொழில் செய்தற்கு. மூங்கில் வளைதல் - பல்லக்குக்கணை முதலியனவாகப் பயன்படுதற்கு. மேலோர் கீழாரோடு சந்திக்கு இசைதல் - பின்பு சமயத்தில் அவரை வெல்லுதற்கும், தற்காலத்தில் பெருமை பெறுதற்கும். முனிவர்கள் நயந்து கொள்ளுதல் - தவவலிமை குறையா

மல் பெருமையடைதற்கு. வலிமை மிக்க சேனை பின்னிடுதல் - சமயமறிந்து முன்னிட்டுப் பகைவெல்லுதற்கு. தொழில் திறமுடையோர் அடங்குதல் - தங்கள் திறத்தைத் தொழிலிற் காட்டி மேன்மைபெறுதற்கு. தலைவர்கள் கீழ்ப்பட்டவர்க்கு அஞ்சினற்போற் காட்டுதல் - அவர்களை ஆராய்தற்கு. முதலை தலைசாய்ந்திருத்தல் - தனக்கு இரையாகும் பிராணியைத் தவறாது வவ்வுதற்கு. மகிழம்பூ உலர்தல் - மணம்மிகுதற்கு, வேய்ங்குழல் குடைபடுதல் - நன்கு பயன்பட்டு இன்னிசை தருதற்கு. "வில்லது வளைந்ததென்றும் வேழம துறங்கிற்றென்றும், வல்லியம் பதுங்கிற்றென்றும் வளர்கடா பிந்திற்றென்றும், புல்லர்தஞ் சொல்லுக்கஞ்சிப் பொறுத்தனர் பெரியோரென்றும், நல்லதென் றிருக்கவேண்டா நஞ்செனக் கருதலாமே" என்பது விவேகசிந்தாமணிச் செய்யுள். அரனை - சிவபிரானை; வரனை எனப் பதம்பிரித்தும் உரைக்கலாம்; வரன் - சிறந்தவனை சிவபிரான். வலமது புரிந்து - பிரதக்ஷிணஞ்செய்து. மத கரிக்கு - மதம்பிடித்த யானையின் வடிவங்கொண்ட விநாயகமூர்த்திக்கு. இளைய - தம்பியான. (57)

தெய்வச் செயல்

சோடாய் மரத்திற் புறவிணை யிருந்திடத்
துறவுகண்டே வேடுவன்
றேலாம லவையெய்யவேண்டுமென் றொருகணை
தொடுத்து வில்வாங்கி நிற்க
ஊடாடி மேலே யெழும்பிடி லடிப்பதற்
குலவு ராசாளி கூட
வுயரப் பறந்துகொண்டே திரிய வப்போ
துதைத்தசிலை வேடனடியில்
சேட்ாக வல்விடந் தீண்டவே யவன்விழச்
சிலையிற் றொடுத்த வாளி
சென் றிராசாளிமெய் தைத்துவிழ வவ்விரு
சிறைப்புறு வாழ்ந்த வன்றோ

வாடாம லிவையெலாஞ் சிவன்செயல்க ளல்லான்
மனச்செயலி னாலும் வருமோ
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

புறவு இணை - இரண்டுபுறாக்கள். துறவு கண்டு - (அப்புறாக்களின் உயிர் உடலினின்று) நீங்கச் செய்தலை [கொல்லுதலைக்] கருதி. தோலாமல் - தோற்காமல், தவறாமல். கணை - அம்பு. வில் வாங்கி - வில்லை வளைத்து. ஊடாடி - நடமாடி, பழகி, முயன்று. உலவு - உலாவுகின்ற, திரிகின்ற. ராசாளியென்பது - பறவைகளில் வலிய ஒன்று; இதனைப் பறவைப்புலி யென்பர். உதைத்த சிலை வேடன் அடியில் - (அம்பைச்) செலுத்திய வில்லையுடைய வேடனது காலில். சேடு ஆக - நன்றாக, பலமாக. வல் விடம் தீண்ட - கொடிய விடமுள்ள ஸர்ப்பங் கடிக்க. வாளி - அம்பு. மெய் - உடல். சிறை - சிறகு. வாழ்ந்த - உயிர்பிழைத்தன. வாடாமல் - சோர்வில்லாமல், தவறாமல். மனம் செயலினால் - மனத்தின் செயலாகிய எண்ணத்தினால். ' நாமொன்றெண்ணத் தெய்வமொன் றெண்ணிற்று ' என்பது உலகமொழி. (58)

பாடலியல்பு

எழுத்தசைகள்சீர் தளைகளடிதொடைகள் சிதையா
திருக்கவேவேண்டு மப்பா
வீரைம்பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்
பினியசொற் கமையவேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாகவே பொரு
ளடக்கமு மிருக்கவேண்டு
மன்பான பாவின மிசைந்துவரல்வேண்டு மு
னலங்கார முற்ற துறையில்
பழுத்துளமுவந் தோசை யுற்றுவரல் வேண்டும்
படிக்குமிசை கூடல்வேண்டும்
பாங்காக வின்னவை பொருந்திடச் சொற்கவிதை
பாடிற் சிறப்பென்பர்காண்

மழுத் தினஞ் செங்கைதனில்வைத்த கங்காள னருண்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

எழுத்து - அகரம் முதலியன. அசைகள் - நேரசை, நிரையசை என்பன. சீர் - ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என்பன. தளைகள் - நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, வெண்சீர்வெண்டளை, இயற்சீர்வெண்டளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாவஞ்சித்தளை, கலித்தளை என்பன. அடி - குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்பன. தொடைகள் - எதுகை, மோனை, முரண், அளபெடை, இயைபு என்பன; அந்தாதித்தொடையென் றும் ஒன் று உண்டு. சிதையாது-கெடாமல். ஈரைம்பொருத்தம்-பத்துவிதப் பொருத்தங்கள்; அவை-மங்கலப்பொருத்தம், சொற்பொருத்தம், எழுத்துப்பொருத்தம், தானப்பொருத்தம், பாற்பொருத்தம், உணாப்பொருத்தம், வருணப் பொருத்தம், நாட்பொருத்தம், கதிப்பொருத்தம், கணப்பொருத்தம் என்பன. இவற்றை யெல்லாம் செய்யுளிலக்கண நூல்களில் விவரமாகக் காண்க. மதுரம் - இனிமை. பளபளப்பு - பொருள் விளக்கம், தெளிவு. அழுத்தம் - சொல்லழுத்தம், பொருளழுத்தம். குறள் - திருக்குறள்; திருவள்ளுவநாயனார் அருளிச்செய்தது. அன்பு ஆன - விரும்பத்தக்க. பா இனம் - பாவும், பாவினமும். பா - செய்யுள்; அவை - வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியப்பா என்பன. பாவினம் - துறை, தாழிசை, விருத்தம் என்பன. அலங்காரம் - சொல்லணியும், பொருளணியும். சொல் லணி - பிராசம் முதலியன. பொருளணி - உவமை முதலியன. பழுத்து - முதிர்ந்து. உளம் உவந்து - மனம் மகிழும்படி. உற்று- பொருந்தி. இசை - ஸங்கீதம். பாங்கு ஆக - அழகாக, முறையாக. இன்னவை- இவை. கவிதை - பாடல். மழு - ஓர் படை. கங்காளன் - தசை கழிந்த உடல்முழுவெலும்பைத் தரித்த சிவபிரான். அருள் - பெற்றருளிய. (59)

### விபூதிதரிக்கு முறைமை

பத்தியொடு சிவசிவாவென்று திருநீற்றைப்
பரிந்து கையா லெடுத்துப்
பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு
பருத்தபுயமீதி லொழுக
நித்த மூவிரல்களா னெற்றியி னழுந்தவுற
நினைவாய்த் தரிப்பவர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரிசுத்தமாம்
நீங்காம னிமல னங்கே
சத்தியொடு நித்தம் விளையாடுவன் முகத்திலே
தாண்டவஞ் செய்யுந் திரு
சஞ்சலம் வராது பரகதியுதவு மிவரையே
சத்தியஞ் சிவனென்னலாம்
மத்தினியமேருவெனவைந் தமுதினைக்கடையு
மான் மருகனா முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

பரிந்து - விரும்பி. பாரினில் - பூமியில். ஒழுக - சிந்த. நித்தம் - நாள்தோறும். நீடு வினை - பெரிய கர்மம். வினையென்பது, நல்வினை தீவினையென்னும் இரண்டையுங் குறிக்கும். நிமலன் - குற்றமற்ற கடவுள், சிவபிரான். சத்தி - உமாதேவி. தாண்டவம் - நர்த்தனம். திரு - இலக்குமி. 'முகத்திலே தாண்டவஞ்செய்யுந் திரு' — முகம் ஐசுவரியக்களையோடு பொலிவுறும் என்பதாம். சஞ்சலம் - விசாரம், துயரம். பர கதி - முத்தி. இனிய மேரு - சிறந்த மேருமலை. அமுதினை - பாற்கடலை. மால் மருகன் - திருமாலின் மருமகன். (60)

## விபூதிவாங்கு முறைமை

பரிதனிலிருந்து மியல்சிவிகையிலிருந்து முயர்
பலகையிலிருந்து மிகவே
பாங்கான வம்பலந்தனிலேயிருந்தும்
பருத்ததிண்ணையிலிருந்தும்
தெரிவொடு கொடுப்பவர்கள் கீழ்நிற்க மேனின்று
திருநீறு வாங்கி யிடினுஞ்
செங்கையொன்றாலும் விரன்மூன்றாலும் வாங்கி
திகழ் தம்பலத்திலேனும் [னுந்
அரியதொருபாதையி னடக்கின்றபோதிலு
மசுத்தநிலமானவிதிலு
மங்கே தரிக்கினுந் தந்திடிற் றள்ளினு
மவர்க்குநர கென்பர் கண்டாய்
வரிவிழிமடந்தை குறவள்ளி நாயகிதனை
மணந்துமகிழ் சக நாதனே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

பரி - குதிரை. இயல் சிவிகை - பொருந்திய பல்லக்கு. பாங்கு ஆன - அழகான. அம்பலம் - பலருங் கூடும் பொதுவிடம். தெரிவொடு - அறிவோடு. திகழ் தம்பலத்திலேனும் - விளங்குகின்ற தாம்பூலம் தரிக்கும் நிலையிலும். அரியது - அருமையானது. பாதை- வழி. தள்ளினும் - சிந்தினாலும், வேண்டாமென்று மறுத்தாலும். வரி விழி - செவ்வரிபரந்த கண்கள்; வரி - கோடு. மடந்தை - பெண். சக நாதன் - உலகத்திற்குத் தலைவன். (61)

## இவ்வுறுப்பாற் பயனில்லெனல்

தேவாலயஞ் சுற்றிடாதகா லென்னகா
றெரிசியாக்கண் ணென்னகண்
தினமுமே நின்கமலபாதத்தை நினையாத
சிந்தைதா னென்னசிந்தை
மேவாகமஞ் சிவபுராணமவை கேளாமல்
விட்டசெவி யென்ன செவிகள்
விமலனை வணங்காத சென்னி யென்சென்னி பணி
விடைசெயாக்கை யென்ன கை
நாவார நினையேத்திடாதவா யென்ன வாய்
நற்றீர்த்த மூழ்கா வுட
னானிலத் தென்ன வுடல் பாவியாகிய சனனம்
நண்ணினாற் பலனேதுகாண்
மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்ட முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

தெரிசியா - காணாத. கமலம் பாதம் - தாமரைமலர் போலுந் திருவடி. மேவு ஆகமம் - (சிறப்புப்) பொருந்திய ஆகமம். விமலன் - குற்றமற்ற சிவபிரான். சென்னி - தலை. பணிவிடை - கைங்கரியம். நா ஆர - நாக்குநிரப்ப. நினை ஏத்திடா - உன்னைத் துதியாத. நல் தீர்த்தம் - சிறந்த (கங்கை முதலியவற்றின்) நீர். நானிலத்து - பூமியில். சனனம்' - பிறப்பு. நண்ணினால் - பொருந்தினால். அடைந்தால். உருவ - துளைக்க, புதைத்தோட. (62)

## நற்பொருளொடு தீப்பொருள் பிறத்தல்

கோகநத மங்கையுடன் மூத்தவள் பிறந்தென்ன
குலவுமாட்டின்க ணதர்தான்
கூடப் பிறந்தென்ன தண்ணீரி னுடனே
கொடும்பாசி யுற்று மென்ன
மாகருணு மமுதினெடு நஞ்சம் பிறந்தென்ன
வல்லிரும்பிற் றுருத்தான்
வந்தே பிறந்தென்ன நெடுமரந் தனின் மொக்குள்
வளமொடு பிறந்தென்ன வுண்
பாகமிகு செந்நெலொடு பதர்தான் பிறந்தென்ன
பன்னு மொருதாய்வயிற்றிற்
பண்புறு விவேகியொடு கயவர்கள் பிறந்தென்ன
பலனேது மில்லை யன்றோ
மாகனகமேருவைச் சிலையென வளைத்த சிவன்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

கோகநதம் மங்கை - செந்தாமரைமலரில் வீற்றிருக்கும் பெண்ணுகிய திருமகள். பாற்கடல் கடையப்பட்ட காலத்தில் திருமகள் தோன்றுதற்குமுன்னே மூதேவி தோன்றின ளென்பது, வரலாறு; அதனுலே, அவளுக்கு மூத்தவள் என்பது ஓர் பெயர். குலவும் - விளங்குகின்ற. ஆட்டின்கண் - ஆட்டினிடத்தில். அதர்- ஆட்டின்கழுத்தில் நீளமாகத் தொங்குகிற பயனற்ற தோல். உற்றும் - பொருந்தியிருந்தும். மாகர் - தேவர்கள். நஞ்சம் - விஷம். வல் இரும்பில் துரு என்று பிரித்துக்கொள்க. வல் - வலிய. மொக்குள் - புல்லுருவி என்பர். உண் - உண்ணுதற்கு உரிய. பாகம் மிகு- சமையலுக்குச்சிறந்த. பதர் - உள்ளீடில்லாத நெல்; வெறும் உமிக் கூடு. பன்னும் - சொல்லப்படும். பண்பு உறு - நற்குணம் மிக்க

கயவர்கள் - யாதொருநற்குணமுமில்லாத கீழ்மக்கள். மா கனகம் - சிறந்த பொன். சிலையென - விற்போல, வில்லாக. (63)

### தன்னினந்தா லழிவு

குலமான சம்மட்டி குறடு கைக்குதவியாய்க்
கூரிரும்புகளை வெல்லுங்
கோடாலிதன்னுளே மரமது நாமைழந்து தன்
கோத்திரமெலா மழிக்கும
நலமான பார்வைசேர் குருவியானது வந்து
நண்ணுபறவைகளை யார்க்கும்
நட்புடன் வளர்ந்த கலைமானென்று சென்று தன்
னவில்சாதிதனை யிழுக்கும்
உலவுநற்குடிதனிற் கோளாக விருந்துகொண்
டுற்றுரை யீடழிப்ப
ருளவனில்லாம லூரழியா தெனச்சொல்லு
முலகமொழி நிசமல்லவோ
வலமாகவந் தரணிடத்தினிற் கணிகொண்ட
மதயானை தன் சோதரா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

குலம் ஆன - இனமான; இரும்பின் இனமான என்க. கோடாலி - கோடரி. கோத்திரம் - இனம். நலமான - நல்ல. பார்வை சேர் குருவி - பாரவைக்குருவி; குருவிகளைப் பிடித்தற்கு வேடர் முதலியோர் பழக்கிவைத்துக்கொண்டிருக்கும் குருவி; இதனைக் கண்டவுடனே மற்றைக்குருவிகள தன்னினமுள்ளதென்று அச்சந் தவிர்ந்து அதன் அருகிற் சேர்ந்தவுடனே, அவற்றை வேடர்முதலியோர் பிடித்துக்கொள்வர். நண்ணு - வந்தடைந்த. ஆர்க்கும் - வேடர் வலைக்கயிற்றுற் கட்டிப் பிடிக்கச்செய்யும்; ஆர்த்தல் - கட்டுதல். நவில் - சொல்லப்படுகிற. உலவு- (வாழ்வுடன்) பொருந்திய.

கோளர்கள் - கோட்சொல்பவர்கள், கொடியவர்கள். உற்றோர் - உறவினர். ஈடு - பெருமை, வலிமை. உளவன் - அந்தரங்கவிஷயங்களையறிந்தவன். வலம் ஆக - பிரதக்ஷிணமாக. அரன் - சிவபிரான். கனி - இங்கு மாம்பழம். சோதரன் - உடன்பிறந்தான், ஒரு தாய் வயிற்றிற் பிறந்தவன். (64)

### கைவிடத் தகாதவர்

அன்னைசுற்றங்களையு மற்றைநாண் முதலா
வடுத்துவரு பழையோரையு
மடுபகைவரிற் றப்பிவந்த வொருவேந்தனையு
மன்பான பெரியோரையுந்
தன்னைநம்பினரையு மேழையானவரையுஞ்
சார்ந்த மறையோர்தம்மையுந்
தருணமிதுவென்று நல்லாபத்து வேளையிற்
சரணம்புகுந்தோரையும்
நன்னயமதாக முன்னுதவி செய்தோரையும்
நாளுந் தனக்குறுதியாய்
நத்துசேவகனையுங் காப்பதல்லாது கைந்
நழுவவிடலாகாதுகாண்
மன்னயிலு மினியசெஞ்சேவலுஞ் செங்கைமலர்
வைத்த சரவணபூபனே
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

சுற்றம் - உறவினர். அற்றைநாள் - அன்றைத்தினம்; வெகுகாளாக; இளமைதொட்டு என்பது கருத்து. அடு - கொல்லுகின்ற. பகைவரின் தப்பி எனப் பிரித்துக்கொள்க. சார்ந்த - அடுத்துவந்த. மறையோர் - பிராமணர். தருணம் - (காத்தற்கு உரிய) சமயம். நல் ஆபத்து - கொடிய ஆபத்து. நல் நயமது ஆக - மிக்க இனிமையாக. முன் உதவி - செய்யாமற் செய்த உதவி: ஒருதவியுஞ் செய்

யாமலிருக்கையிலேயே மூந்தி ஒருவர் ஒருவர்க்குச் செய்யும் உபகாரம். உறுதி ஆய் - நன்மைசெய்பவனாய், பலயாகப் பொருந்தி. நத்து - விரும்பியிருக்கின்ற. மன் அயில் - சிறந்த வேற்படை; மன் - நிலைபெற்ற எனினுமாம். இனிய - சிறந்த. சரவண பூபன் - நாணற்காட்டில் தோன்றிய தலைவன்: முருகக்கடவுள். (65)

## நல்லோர் முறைமை

கூடியே சோதரர்கள் வாழ்தலாலுந் தகு
குழந்தைபல பெறுதலாலும்
குணமாகவே பிச்சையிட்டுண்கையாலுங்
கொளும்பிதிர்க் கிடுதலாலுந்
தேடியே தெய்வங்களுக் கீதலாலுந்
தியாகங் கொடுத்தலாலுஞ்
சிறியோர்கள் செய்திடும் பிழையைப் பொறுத்துச்
சினத்தைத் தவிர்த்தலாலும்
நாடியே தாழ்வாய் வணங்கிடுதலாலு மிக
நல்வார்த்தை சொல்லலாலும்
நன்மையே வருமலாற் றாழ்ச்சிகள்வரா விவை
நல்லோர்கள் செயு முறைமைகாண்
வாடி மனநொந்து தமிழ்சொன்ன நக்கீரன்முன்
வந்துதவிசெய்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

தகு-தக்க. கொளும் பிதிர்க்கு-(திலதர்ப்பணாதிகளைக்) கொள்ளுதற்கு உரிய பித்ருதேவதைகளுக்கு. இடுதலாலும் - (பிண்டம் முதலியவை) அளித்தலாலும். தேடி - (பொருளைத்) தேடி. தியாகம் - வரையாது கொடுத்தல். நாடி - விரும்பி. தாழ்ச்சிகள் - தாழ்வுகள், குறைவுகள். தமிழ் சொன்ன - தமிழில் திருமுருகாற்றுப் படை முதலிய நூல்களைப் பாடிய. (66)

### அடைக்கலங் காத்தல்

அஞ்சலென நாயினுட றருமன் சுமந்துமுன்
 றுறைக் கடத்துவித்தா
னடைக்கலமெனுங் கயற்காக நெடுமாலுட
 னருச்சுனன் சமர்புரிந்தான்
தஞ்சமென வந்திடு புறவுக்கு முன் சிபி
 சரீரந்தனைக் கொடுத்தான்
றடமலைச்சிறகரிந்தவனை முன் காக்கத
 ததீசி முதுகென்பளித்தான்
இன்சொலுடனே பூததய வுடையராயினோ
 ரெவருக்கு மாபததிலே
யினிய தஞ்சீவனை விடுத்தாகிலுங் காத்
 திரங்கி ரக்ஷிப்ப ரன்றோ
வஞ்சக் கிரவுஞ்சமொடு தாருகன் சிங்கமுகன்
 வளர்சூர னுடல் கீண்டவா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
 மலைமேவு குமரேசனே.

அஞ்சல என - அஞ்சாதேயென்று. உடல் தருமன் என்று பிரிக்க. அடைக்கலம் - சரணம். கயற்கு ஆக - கயன் என்னும் கந்தருவனுக்காக. நெடு மாலுடன் - பெருமைக்குணமுடைய திருமாலினது திருவவதாரமான கண்ணபிரானுடனே. சமர் புரிந்தான- போர்செய்தான். தஞ்சம் - அடைக்கலம். தட - பெரிய. சிறகு - இறகு. அரிந்தவன் - அறுத்தவனான இந்திரன். முதுகு என்பு அளித்தான் - முதுகெலும்பைக் கொடுத்தான். பூத தயவு உடையர் - பிராணிகளிடத்தில கருணையுடையவர். வஞ்சம் கிரௌஞ்சமொடு - வஞ்சனையையுடைய கிரௌஞ்சகிரியுடனே. கீண்டவா - (வேலகொண்டு) பிளந்தவனே. நாயினுடல தருமன் சுமந்த கதை முதலியன கேட்டறிக; விரிப்பின் பெருகும். (67)

## பெரியோ ரியல்பு

அன்னதானஞ் செய்தல் பெரியோர்சொல்வழி நிற்ற
லாபத்தின் வந்தபேருக்
கபயங் கொடுத்திடுத னல்லினஞ் சேர்ந்திடுத
லாசிரியனவழிநின் றவன்
சொன்னமொழி தவறாது செய்திடுதல் தாய்தந்தை
துணையடி யருச்சனை செயல
சோம்பலில்லாம லுயிர்போகினும் வாய்மைமொழி
தொல்புவியி னட்டியிடுதல்
மன்னரைச் சேர்ந்தொழுகல் நற்புடைய மனைவியொடு
வைகினுந் தாமரையிலை
மருவுநீரென வுறுத லிவையெலா மேலவர்த
மாண்பென் றுரைப்ப ரன்றே
வன்னமயின்மே லிவர்ந் திவ்வுலகை யொருநொடியில்
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனே புல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

பெரியோர் சொல்வழி நிற்றல் - பெரியோர் சொற் கேட்டு அதன்படி நடத்தல். அபயம் கொடுத்திடுதல் - அஞ்சாதீர்களென்று சொல்லிப் பாதுகாத்தல். நல்லினம் சேர்ந்திடுதல் - நல்லாரோடு இணங்கியிருத்தல். ஆசிரியன் வழி நின்று - ஆசாரியனிடத்துப் பணிவுடனிருந்து துணை அடி - இருபாதங்கள். சோம்பலில்லாமல் நாட்டியிடுதல் என்று கூட்டுக. வாய்மை மொழி - சத்திய வசனம். தொல் புவியில் - பழைய பூமியில். நாட்டியிடுதல் - தாபித்தல். வைகினும் - கூடியிருந்தாலும். மருவு - பொருந்திய. உறுதல் - (தோய்ந்தும் தோயாது) பொருந்தியிருத்தல்; அதிகப்பற்று வைத்திடாம லிருத்தல். மாண்பு - சிறந்த குணம். வன்னம் - அழகிய நிறம். இவர்ந்து - ஏறி. (68)

